Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.

25


# ஸ்ரீராமாநுஜன் 150

P. B. Annangaracharya, Kancheepuram.

ஆசிரியர் : ஸ்ரீகாஞ்சி. P. B. அண்ணங்கராசாரியர்.

வருடச்சந்தா ரூ. 5


## இந்நிலவுலகின் ஸூர்யன் அஸ்தமித்தானந்தோ!

தினப்படி ஸூர்யன் உதிக்கிறான், அஸ்தமிக்கிறான், மீண்டுமுதிக்கிறான். ஆதலால் ஸூர்யன் அஸ்தமித்துவிட்டானே யென்று வருந்துவாராருமிலர். புதுடில்லியில் வாழ்ந்த (ஸ்ரீமதுபயவே) டாக்டர். ஸர். பத்மபூஷண K. S. கிருஷ்ணன், F. R. S. என்னும் பூலோக ஸூர்யன் 13—6—61 இரவு 12-30 மணிக்கு



அஸ்தமித்ததை அதிசயமென்போமா? ஆச்சரியமென்போமா? அற்புதமென்போமா? அளவு கடந்ததுக்கஹேது வென்போமா? ஒன்றுமறிகின்றிலோம். "ஹா திக் கஷ்டமநிஷ்டமஸ்தகருண: கோயம் விதே: ப்ரக்ரம:!" என்ற பவபூதி பத்யத்தையே உலகமெல்லாம் உத்கோஷிக்கக் காண்கிறோம்.

## ஸ்ரீவைஷ்ணவர்களனைவர்க்கும் அறிவிப்பு

ந்ருஸிம்ஹப்ரியா ப்ரத்யாக்க்யானமென்னும் நமது நூல் 15-6-61ல் வெளிவந்த அம்ருதலஹரி 211ல் வெளியிடப்பட்டிருந்தாலும் இதனிலும் வெளியிடப்பெறுகின்றது. பெரும்பாலும் அந்த பத்திரிகையை அநுபவிப்பவர்கள் வேறாயும், இந்த பத்திரிகையை அநுபவிப்பவர்கள் வேறாயுமிருப்பதால் உலகிலுள்ள ஸகல ஸ்ரீவைஷ்ணவர்களும் இந்த ப்ரத்யாக்க்யானப் பிரபந்தத்தை அநுபவித்தேயாக வேணுமென்னுமாவலினால் ஸ்ரீராமாநுஜனும் அதனைத்தாங்கி வெளிவருகின்றது. 13 பக்கங்கள் மட்டுமே லஹரியில் வெளிவந்தவை. 14 ஆம் பக்கம் இதில் விசேஷித்து வாசிக்கத்தக்கது.

சில பிழை திருத்தங்கள்;—"ஸ்ரீமத் பரமஹம்ஸ தென்பரையாண்டவன்" என்றுதொடங்கும் பாரா 6-ல் மூன்றுவது வரியில் திருமழிசைப்பிரானென்றிருப்பது திருமயிலைப்பிரானென்று திருத்தி வாசிக்கத் தக்கது. பாரா 10-ல் அநுவதிக்கப்பட்டுள்ள பெரியவாச்சான்பிள்ளை ஸ்ரீஸூக்தியில் "களவுக்கு ஸ்தானமன்று" என்றிருப்பது "களவுக்கு ஸ்தானமென்று" என்று வாசிக்கத் தக்கது. பாரா 16 ல் மஹர்ஷிவாஸுதேவாசார்ய ப்ரஸ்தாவத்தில் "விசால ஹ்ருதயமும்" என்றிருப்பது விசாலஹ்ருதயரும் என்று திருத்தத்தக்கது.

பிலவஹு ஆனிமீ 1961ஹு ஜூன்மீ

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.


# ஸ்ரீ ராமாநுஜன் 150

சென்னை ஸத்க்ரந்தப்ரகாசன ஸபா மூலமாக மாதந்தோறும் வெளிவரும் பத்திரிகை,

ஆசிரியர்: ஸ்ரீ காஞ்சீ. P. B. அண்ணங்கராசாரியர்.

| ஸம்புடம் 13 | பிலவஞு ஆனிமீ 1961ஞு ஜூன்மீ | ஸஞ்சிகை 6 |
|---|---|---|


## திருவாய்மொழி நூற்றந்தாதி—40

ஒன்றுமிலைத் தேவு இவ்வுலகம் படைத்தமால் *
அன்றியென ஆரு மறியவே *—நன்ருக
முதலித்துப் பேசியருள் மொய்மகிழோன் தாள்தொழவே *
காதலிக்கு மென்னுடைய கை. 40

| | | | |
|---|---|---|---|
| இ உலகம் படைத்த | இந்த லோகங்களை யுண்டாக்கின | பேசி அருள் | அருளிச் செய்த |
| மால் அன்றி | ஸர்வேச்வரனைத் தவிர | மொய் மகிழோன் | பெருமை தங்கிய வகுளாபரணருடைய |
| தேவு | தெய்வம் | தாள் தொழ எ | திருவடிகளை நோக்கி அஞ்சலி செய்வதன் பொருட்டே |
| ஒன்றும் இலை என | வேறொன்றுமில்லை யென்று | என்னுடைய கை | எனது கைகள் |
| ஆரும் அறிய | யாவருமறியும் வண்ணம் | காதலிக்கும் | ஆசைப்படுகின்றன. |
| நன்ருக முதலித்து | நன்கு நிரூபித்து | | |

* * * வேதாந்தங்களில் ஜக்த்காரண வஸ்துவே உபாஸிக்க வுரியதென்று ஓதி, ஸ்ரீமந் நாராயணனே காரணவஸ்து வென்றும் நிஷ்கர்ஷித்திருக்கையாலே அதனை யடியொற்றி * ஒன்றுந்தேவு திருவாய்மொழியிலே, ஸகல ஜகத்காரணபூதனான ஸர்வேச்வரனைத் தவிர்த்துப் பரதைவம் பிறிதொன்றில்லையென்று கையிலங்கு நெல்லிக்கனியாகக் காட்டியருளின ஆழ்வாரது திருவடிகளைத் தொழுவதே ஸ்வரூபாநுரூப மென்றதாயிற்று.

வைதிகர்கள் வேதாந்தங்களினுட் புகுந்து பரிசீலனை செய்தால், ஸகல ஜகத்காரண பூதமான தெய்வம் இன்னதென்பதை அறுதியிடும் வழி எங்ஙனேயென்னில், சாந்தோக்யமென்னும்உபநிஷத்தில் *ஸதேவ ஸோம்ய இதம் அக்ர ஆஸீத்* என்கிற வாக்யமானது காரணபூதமான வஸ்துவை ஸத் என்ற சப்தத்தாலே ஓதிற்று; இது ஸாமாந்ய சப்தமேயல்லது விசேஷசப்தமன்று; மற்றொரு உபநிஷத்து * ஆத்மா வா இதமேக ஏவாக்ர ஆஸீத்* என்று ஆத்ம சப்தத்தாலே ஓதிற்று; இதுவும் விசேஷ சப்தமன்று. மற்றொரு உபநிஷத்து * ப்ரஹ்ம வா இதமேகமேவாக்ர ஆஸீத்* என்று ப்ரஹ்ம சப்தத்தாலே ஓதிற்று; இதுவும் விசேஷசப்தமன்று. கடைசியாக மஹோபநிஷத்திலே * ஏகோ ஹ வை நாராயண ஆஸீத் ந ப்ரஹ்மா நேசாநோ நேமே த்யாவாப்ருதிவீ * என்று நாராயண சப்தத்தாலே ஜகத்காரண பூதமான வஸ்து ஓதப்பட்டிருக்கிறது. இந்த நாராயண சப்தமானது ஸத் சப்தம் போலவும் ஆத்ம சப்தம் போலவும்

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



ப்ரஹ்ம சப்தம் போலவுமன்றிக்கே விசேஷ சப்தமாகையாலே கீழெடுத்த ஸாமாந்ய சப்தங்களெல்லாம் இந்த விசேஷ வ்யக்தியிலே பர்யவஸித்து நின்று நாராயணனே ஸகல ஜகத் காரண பூதன் என்று காட்டி அவன்றன்னையே பரதெய்வமாக நிலைநாட்டி நிற்கும். இப்படி வேத வேதாந்தங்களிலே சிரமப்பட்டுப் பரத்வநிஷ்கர்ஷம் பண்ணப்பட வேண்டிய பரமபுருஷன் திருக்குருகூரிலேயே * ஸுதா-ஸ்வாமிஸ்வ-ஸஹிஷ்ணு அ-ஃகவஸாயீ நாவிரா ஜூவஸி தி:— அர்ச்சயஸ் ஸர்வஸஹிஷ்ணுரர்ச்சகபராதீநாகிலாத்மஸ்திதி:* என்கிறபடியே எளியனாய்க் காட்சி தந்தருளா நிற்க இவனைப் பணிந்து உஜ்ஜீவித்துப் போகாதே அல்ப தெய்வங்களைப் பணிந்து அநர்த்தப்பட்டுப் போகிறீர்களே! என்று தேவதாந்தரபரர்களைத் தட்டியுணர்த்துவது இத்திருவாய்மொழி.

---

## கம்பரின் பக்கவித்திரட்டு.

உபந்யாஸகர்களின் ஸௌகர்யார்த்தமாகக் கம்பராமாயணத்திலிருந்து சுவைமிக்க பாடல்களைத்தொகுத்து நாம் வெளியிடத்தொடங்கியது ஸ்ரீராமாநுஜன் 93-ல் (அதாவது 1956 செப்டம்பர் மாதத்தில்.) கம்பரின்பக்கவித்திரட்டு எனும் அந்நூல் தொடர்ச்சியாக ஸஞ்சிகைதோறும் வெளிவர அவகாசம் அரிதானபடியால் பல ஸஞ்சிகைகளில் வெளிவராதிருந்தது. இதுகாறும் 16 பாரங்கள் (128 பக்கங்கள்) மட்டும் வெளிவந்துள்ளன. அயோத்யா காண்டத்தில் பாதிபாகம் வெளிவந்துள்ளதென்கை. அதற்குமேல் அக் காண்டத்தை முடித்து இச்சஞ்சிகையில் வெளியிட்டிருக்கிறோம். மேல் நான்கு காண்டங்கள் ஒரே ஸம்புடமாகத் தனிப்புத்தகமாய் வெளிவரும். இப்போது பாலகாண்ட அயோத்யாகாண்டங்களை மட்டும் தனிப்புத்தகமாக பயிண்டு செய்வித்துக் கொள்ளலாம். 93-ரெ. ஸஞ்சிகையிலிருந்து இது ஸம்பந்தமான பாரங்களைப் பிரித்தெடுத்துக்கொள்க.

தனிப்புத்தகமாக ஆக்கப்பட வித நமது க்ரந்தமாலா நிலயத்தில் 2 ரூ. விலைக்குக் கிடைக்கும். தபாற்செலவு 35 ந. பை.

---

## ஒரு விலக்ஷணமான கடிதம்.

கும்பகோணம் ஸ்ரீ. பூவராஹாசாருடைய கடிதம் 20-6-61ல் அவரால் எழுதப்பட்டு 22—6—61ல் நமக்குக் கிடைத்திருக்கிறது. அதிலுள்ள விஷயமென்னவென்றால், "........... அடியேனபிப்ராயம் வெளியிட்டதை தேவரீர் 61 மேஸீ அம்ருதலஹரீ பத்ரிகையில் பிரசுரித்திருக்கிறது. அதைப்பார்த்த, திருக்குடந்தையில் அடியேனுக்கு பால்யம் முதல் ஸஹாத்யாயிகளாகவும் நண்பர்களாகவுமுள்ள ப்ராமாணிகர்கள் பலர் அடியேன் குடிசைக்கு எழுந்தருளி .... .... அடியேன் ஸம்பூர்ணமாக விப்ரதிபந்நவிஷயங்களெல்லாவற்றையும் தொடக்கம் முதல் பராமர்சிக்காமல் ஒரு ஸஞ்சிகையை மாத்திரம் பார்த்துவிட்டு ஒரு பக்ஷத்துக்கு ஸாதகமாய் எழுதியது ஸரியல்லவென்றும் முழுதும் பராமர்சித்து எழுதியிருக்கவேணுமென்றும், ஸ்வாமிஸம்பிரதாயத்துக்கு வைதேசிகனான அடியேன் எழுதுவது உசிதமல்லவென்றும் எனக்கு பால்யம் முதல் பரம ஆப்தர்களும் ஸுஹ்ருத்துக்களுமான அந்த மஹான்கள் கோபத்துடன் சொல்ல".... .... ....

[இதற்குமேல் அவர் எழுதக்கூடியது தெரிந்ததேயாதலால் முடிவில் என்ன எழுதுகிறார்? பார்ப்போமென்று முடிவைப்பார்த்ததில்]

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



க்ஷமிக்கவும். திருக்குடந்தையில் அடியேனுக்கு நண்பர்களாகவுள்ளவர்கள் அனைவரும்
னக்கு விரோதிகளாகிவிட்டனர்; என்னுடைய கடிதத்தைப் பிரசுரித்ததிலிருந்து அநாவச்
கமாகப் பலருடைய நட்பை இழக்க நேரிட்டது. இது மிகவும் சோசநீயமாகவுள்ளது.
பிரங்களை வெளியிட விரும்பவில்லை. தேவரீர் மிகவும் க்ஷமித்தருள ப்ரார்த்திக்கிறேன்.
ஸஹார்த ஸம்பதே ஸ்வஸ்தி. நித்யஸ்ரீ:." என்று முடித்திருக்கிறார். திருக்குடந்தை வாஸி
ளான ஐயங்கார்கள் இவரை மிகவும் சிரமப்படுத்தியதாக இக்கடிதத்தினால் ஸ்பஷ்ட
ாகிறது. அதனால் ந்ருஸிம்ஹப்ரியாவுக்கு ஏதோ கடிதமெழுதியதாகவும் தெரிவிக்கிறார்.

அன்பர்களே! இந்த பூவராஹாசார் ஒருவருடைய கோபதாபங்களுக்கும் நிர்ப்பந்தத்
ற்கும் ஆள்படாமல் ஈச்வரன் கொடுத்த ருஜுவான புத்தியோடு 27--4—61ல் என்ன
ழுதியிருக்கிறாரென்பதை கவனிக்கவேண்டியதுதான் முக்கியம். அதை அம்ருதலஹரீ
ாசகர்கள் பார்த்திருக்கிறார்களேயொழிய ஸ்ரீராமாநுஜன் வாசகர்கள் பார்த்திருக்கப்ரஸக்தி
ில்லை. அக்கடிதத்தில் முக்யமான பாகத்தை மட்டும் ஈண்டு அநுவதிக்கிறேன்;

"ஸ்ரீஸ்வாமி பரமக்ருபையுடன் அனுப்பிய ஸ்ரீராமாநுஜன் 147 & 148 ஸஞ்சிகை
சர்ந்தது. இந்த ஸஞ்சிகையில் கண்டுள்ள விஷயங்களை ஸவிமர்சம் முழுதும் வாசித்துப்
ார்த்ததில் பல ஶாஸ்த்ரார்த்தங்களையும் பண்டிதர்களும் ஸேவித்து ப்ரமிக்கும் வகையில்
கார்வையாகவும் ஆர்ஜவத்துடனும் ந்யாயாநுஸந்தான பூர்வகமாயும் யுக்தாயுக்த பராமர்
ஶம் செய்து தத்வத்தை உபபாதனம் பண்ணியிருக்குமழகு வாசாமகோசரம். விஶதவாக்
காமணிகளான மணவாளமாமுனிகளின் அவதார புருஷராகவே தேவரீரைப் பல ஆஸ்திகர்
ள் கருதுவதில் அதிஶயோக்தி யொன்றுமில்லை. உபயபாஷாப்ராவீண்யமும் அஸூயா
ாஹித்யமும் உள்ள எந்த மதத்து வித்வான்களும் ஸ்வாமி பல க்ரந்தங்களில் அருளிச்செய்த
ிவ்ய ஸ்ரீஸூக்திகளைக் கண்டு மனம் பூரித்து ஆனந்தமடைவர் என்பதற்குப் பல ஸந்தர்ப்பங்
ளில் பண்டிதர்கள் அபிநந்தனம் செய்து வாழ்த்தியிருப்பதே ஸாக்ஷியாகும். ஸ்ரீ உப. வே.
க்ஷ்மீபுரம் ஸ்ரீநிவாஸாசார்ய ஸ்வாமி, ஸ்ரீ உப. வே. கபிஸ்தலம் தேசிகாசார்ய ஸ்வாமி,
ஸ்ரீ உப. வே. அபிநவ பட்டபாண R., V. K. ஸ்வாமி (ராயப்பேட்டை, கிருஷ்ணமாசாரியர்
ஸ்வாமி) முதலிய நிஷ்பக்ஷபாதரான மஹான்கள் ஸ்வாமியின் ஆர்ஜவத்தைப் பாராட்டியிருப்
து அவர்களுடன் பழகியவனும் 61 பிராயத்தை தாண்டியவனுமாகிய அடியேனுக்கு அநு
வ பூர்வமாகவும் தெரியும் ... ... ... ஸ்ரீராமாநுஜன் ஸப்ததிரத்னம், ஸ்ரீபாஷ்யஶாந்தி
ாலக்ஷேப வைபவ விமர்ஶையில் (10-11 பக்கம்) முதலானவற்றை ஸேவித்தபோது அடி
யேனால் சிரிப்பை அடக்க முடியவில்லை. இப்போது நினைத்தாலும் சிரிப்பு வருகின்றது.
பூதிகந்தி புஷ்பப்ரஹார ஸப்ததி, பூதிகந்தி புஷ்ப ப்ராஶநம், லோகாபிராம நல்வார்த்தைத்
திரள் முதலிய எல்லா வியாஸங்களுமே ஆர்ஜவத்தோடு பராமர்ஶம் செய்யப்பட்டு ப்ராமா
ணிகமான மார்க்கத்தில் உபபாதனம் செய்யப் பட்டிருப்பதால் அநஸூயுக்களான பண்டிதர்
களுக்கு போக்யங்களேயாகும். கிம் பஹுநா? ஸ்வாமியின் ஸ்ரீஸூக்திகளைப் பலகாலும்
ஸேவித்தவர்கள் எம்மதத்தினராயினும் அவர்கள் ஸ்ரீராமாநுஜ தரிசனத்தினுடையவும் ததிதர
வைதிக மதங்களினுடையவும் ஸாரத்தையும் வைலக்ஷண்யங்களையும் நன்றாக அறிந்து கொள்
வார்களென்பது ஸகல வித்வான்களும் ஸம்மதியாகச் சொல்லும் விஷயம். ஸ்வாமி விஷயத்
தில் ப்ரதிபக்ஷிகளான பலர் தாங்கள் எழுதும் வியாஸங்களில் அவத்ய மயமாய் விஷய விசார
மில்லாமல் தூஷணமாத்ரமே யுள்ள பல சுவடிகளை வெளியிட்டாலும் ஸ்வாமி பொறுமை
யிழக்காமல் நிரவத்யமாயும் ஶாஸ்த்ரீய விஷய விசாரணமாயும் ஸயுக்திகமாயும் ஆக்ஷேபங்

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



களையெல்லாம் களைந்து கம்பீரமான ஹாஸ்ய ரஸாநுபவமும் சேரப் பராமர்ஶம் செய்து
விஷயங்களை உபபாதநம் செய்து வருவது மிகவும் ச்லாகநீயம்."

இது பூவராஹாசார் அக்ருத்ரிமமாக எழுதின கடிதம். இவர் உள்ளூர்வாஸிகளான
ஐயங்கார்களால் புத்திபேதம் செய்யப்பெற்றாலும் எந்த விஷயத்தை இவர் இல்லைசெய்ய
முடியுமென்பதை தடஸ்தர்கள் சிறிது கவனிக்கவேண்டும். ஸ்ரீராமாநுஜன் 147 & 148 ஸஞ்
சிகையை விமர்சிக்கும்படி இவரை நாம் கேட்டுக்கொண்டோமேயொழிய வேறில்லை. மற்ற
ஸஞ்சிகைகளுக்கும் இதற்கும் யாதொரு ஸம்பந்தமும் கிடையாது. கோரினபடி ஆராய்ந்
தார். ஆபாதத: பார்த்தேனென்று சொல்லிவிடமுடியாதபடி "ஸவிமர்சம் முழுதும் வாசித்
துப் பார்த்ததாக" எழுதிவிட்டார். அதற்குமேலே அதிலுள்ளதெல்லாம் சாஸ்த்ரார்த்த
மென்றும், அது பண்டிதர்களும் ஸேவித்து உகக்கும்படியாகவும், ஆர்ஜவத்துடனும் ந்யாயாநு
ஸந்தான பூர்வகமாயும் யுக்தாயுக்தவிமர்ஶம் செய்து தக்ஷோவவாதநத்துடன் எழுதப்பட்ட
தென்றும் இதனழகு வாசாமகோசரமென்றும் எழுதியுள்ளார். இதை மாற்றவேணுமானால்
"வாசாம் அகோசரமன்று; வாசாம் கோசரந்தான்" என்று மாற்றலாம். அப்படியே மாற்
றட்டும். "உபயபாஷாப்ராவீண்யமும் அஸூயாராஹித்யமும் உள்ள எந்த மதத்து வித்
வான்களும் தேவரீர் பல க்ரந்தங்களில் அருளிச்செய்த திவ்ய ஸ்ரீஸூக்திகளைக் கண்டு மனப்
பூரித்து ஆனந்தமடைவர்" என்றதை மாற்றவேணுமானால் "ஒருபாஷையிலும் ப்ரவேஶ
மற்றவர்களும் அஸூயா பரிபூரிதர்களுமான சிலர் மனம்கொதித்து வருந்திக்கிடப்பர்கள்"
என்று மாற்றலாம். அப்படியே மாற்றட்டும். ஆக்ஷேபலேஶமுமில்லை.

"லக்ஷ்மீபுரம் ஸ்வாமியும் கபிஸ்தலம் ஸ்வாமியும், ராயம்பேட்டை ஸ்வாமியும் முத
லான நிஷ்பக்ஷபாதரான மஹான்கள் தேவரீருடைய ஆர்ஜவத்தைப் பாராட்டியிருப்பது
அவர்களுடன் பழகியவனும் 61 பிராயத்தை தாண்டியவனுமான அடியேனுக்கு அனுபவ
பூர்வகமாகவும் தெரியும்" என்றெழுதியிருப்பதை எவ்விதமாக மாற்ற நினைக்கிறாரென்பது
தெரியவில்லை. தனக்கு 21 பிராயமேயாயிற்றென்றும், அந்த மஹான்கள் மூவரையும் தான்
கண்டதேயில்லையென்றும், அவர்களோடு அநுபவமிருந்ததாக எழுதியது பொய் என்றும்
மாற்றலாம், மாற்றட்டும்.

முக்கியமாக இந்த பூவராஹாசார் எழுதியிருப்பது "தேவரீருக்கு பிரதிபக்ஷிக
ளான பலர் தாங்கள் எழுதும் வியாஸங்களில் அவத்யமயமாய் விஷயவிசாரமில்லாமல்
தூஷணமாத்ரமேயுள்ள பல சுவடிகளை வெளியிட்டாலும் தேவரீர் பொறுமையிழக்காமல்
நிரவத்யமாயும் ஶாஸ்த்ரீய விஷயவிசாரணமாயும் ஸயுக்திகமாயும் ஆக்ஷேபங்களையெல்லாம்
களைந்து கம்பீரமான ஹாஸ்யரஸாநுபவமும் சேரப் பராமர்ஶம் செய்து விஷயங்களை உபபா
தநம் செய்துவருவது மிகவும் ச்லாகநீயம்" என்பதேயாம். இந்த வாக்யங்களை எப்படி மாற்
றலாமென்பதைப் பற்றி, தன்னிடம் வந்து அழுத அந்த ஐயங்கார்களோடேயே கலந்து
ஒரு முடிவுசெய்வது நன்று. நாம் இளமையில் குவலயானந்தம் வாசித்தபோது "வதூ
ஜாரவ்ருத்தாந்தம் வதேத்ஸா யதி தஜ்ஜா ஸவீயஸா । வதிம் பஶ்யாமி தத: ப்ரபஞ்சஜாவ
த்வமஞ்யக் ॥" என்றதை வாசித்திருக்கிறோம். சிறந்த வித்வானான இவரும் கட்டாய
வாசித்தேயிருப்பர் அதை. அந்தவழியில் ஏதாவது ஆலோசித்துப் பார்க்கலாமிவர். இராம
னுக்குப் பட்டாபிஷேகமென்று கூறின கூனிக்கு முதலில் ரத்னஹாரப் பரிசளித்த கைகேயி
தானே விரைவில் மாறுபட்டது .... .... முதலான பல கதைகளைக் கண்டோமுக்கு எதிலும்
வியப்புமில்லை, விக்ருதியுமில்லை. .... .... ....

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.

ஸ்ரீ:

கம்பராமாயணத்திலுள்ள

மிக வினிய பாடல்களின் தொகுதியான

# கம்பரின்பக் கவித்திரட்டு.

ஸ்ரீ காஞ்சி பிரதிவாதி பயங்கரம்

**அண்ணங்கராசாரியர்**

தொகுத்தது.

பாலகாண்டமும் அயோத்யாகாண்டமுமாகிய முதற்பகுதி.

*ஸ்ரீராமாநுஜன் வெளியீடு*



கிடைக்குமிடம் :

**P. B. Annangaracharya**

**L. Kancheepuram.**

விலை 2 ரூ.

*1961.*

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.

ஸ்ரீ:

# ஸமீபகாலத்துப் பதிப்புகளின் ஜாபிதா 10-6-61



கிடைக்குமிடம் ;—P. B. ANNANGARACHARYA

க்ரந்தமாலா ஆபீஸ், சின்ன காஞ்சீபுரம்.

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



# 7. கம்பரின்பக்கவித்திரட்டு—வனம்புகு படலம்

குகப் பெருமாளின் உதவியினால் கங்கையாற்றைக் கடந்தேறிய இராமபிரான் ராட்டியாரோடும் இளையவனோடும் வனத்திற்புகுந்த செய்தியைக் கூறும் பகுதி. பரத்வாஜ னிவரைச் சந்தித்தலும் இப்படலத்திற் கூறப்படுகின்றது.

(இனிய காட்டுவழியில் இராமன்முதலியோர் செல்லுதல்.)

219. *வெயிலிள நிலவேபோல் விரிகதிரிடை வீசப்*
*பயின்மர நிழலீனப் பனிபுரை துளிவானப்*
*புயல்தர விளமென்கால் பூவள வியதெய்த*
*மயிலின நடமாடும் வழியினியன போனர்.*

| | | | |
|---|---|---|---|
| யில் விரி கதிர் இள வே போல் இடை வீச | ஸூரியன் தனது பரவிய கிரணங்களை இள நிலாவைப் போன்று [வெப்பமின்றி] இடையிடையே வீசிக்கொண்டிருக்கவும் | வானம் புயல் பனி புரை துளி தர | வானத்திலே தோன்றிய மேகம் பனித்துளியைப் போன்ற சிறு திவலைகளை வீசவும் |
| | | இளமென் கால் பூ வளவியது எய்த | மெல்லிதாக வீசுகின்ற இளந் தென்றலானது வளப்பமுள்ள பூவின் மணத்தைக் கொய்து கொண்டு வீசவும் |
| ில் மரம் நிழல் ஈன | (ஆங்கு) நெருங்கியுள்ள மரங்கள் நிழலைத் தரவும் | மயில் இனம் நடம் ஆடும் | மயிற் கூட்டங்கள் கூத்தாடப் பெற்ற |
| | | இனியன வழி போனர் | இனிமையான காட்டு வழிகளிலே சென்றார்கள். |

(இராமபிரான் பிராட்டிக்கு வனத்தின் வளங்களைக் காட்டுதல்.)

220. *அருந்தியனையாளே அமுதினு மினியாளே*
*செருந்தியின் மலர்தாங்குஞ் செறியிதழி னசோகம்*
*பொருந்தின களிவண்டிற் பொலிவன பொன்னூதும்*
*இருந்தையி னெழுதீயொத் தெழுவதொ ரியல்காணாய்.*

| | | | |
|---|---|---|---|
| ருந்ததி அனையாளே | அருந்ததியை யொத்த ஸீதையே! | பொருந்தின களி வண்டு பொலிவன | தம்மிடத்துப் பொருந்திய களி வண்டுகளோடு விளங்குவன |
| முதினும் இனியாளே | அமிருதத்தைக் காட்டிலும் இனிப்பானவளே! | பொன் ஊதும் இருந்தையின் எழு தீ ஒத்து எழுவது ஓர் இயல் காணாய் | பொன்னை மூடிவைத்து ஊதுகின்ற கரியிலே மேலெழுந்து எரிகின்ற நெருப்பைப் போன்று எழுந்து தோன்றுமியல்பைக் காணாய். |
| ருந்தியின் மலர் தாங்கும் | சுரபுன்னைப் பூக்களைத் தாங்குகின்ற | | |
| றி இதழின் அசோகம் | நெருங்கிய இதழை யுடைய அசோக மலர்கள் | | |

அசோக மலரின் இடையிலே செருந்தி மலர் தங்கியிருக்க, வண்டுகள் அவற்றின்மீது மாய்க்குங் காட்சி—நெருப்பிலே பொன்னை வைத்துக் கரியால்மூடி ஊதுகுழல் கொண்டு துகையில் அக்கரியின் இடைவழியாக அக்னிஜ்வாலை வெளிவருவது போலுமென்று த்ப்ரேக்ஷாலங்கார வகையில் வருணனை. .... .... .... ....

(இதுவுமது.)

221. *வாள்புரை விழியாயுன் மலர்புரை யடிமானத்*
*தாள்புரை தளிர்வைகுந் தகைஞிமி றிவைகாணாய்*
*கோள்புரை யிருள்வாசக் குழல்புரை மழைகாணாய்*
*தோள்புரை யிளவேயின் தொகுதிக ளிவைகாணாய்.*

கம். 17

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



| | | | |
|---|---|---|---|
| வாள் புரை விழியாய் | வாட்படையை யொத்த கண்களை யுடைய சீதையே!, | கோள் புரை இருள் | (பண்டங்களைத் தெ... வொட்டாமற்) செ... ளுந்தன்மையையுடை... மிக்க இருளைக் கொ... |
| மலர் புரை உன் அடி மான | தாமரை மலர்போன்ற உனதுபாதங்களையொப்ப | வாசம் குழல் புரை மழை காணாய் | வாசனையுள்ள கூந்... யொத்த மேகங்க... பாராய்; |
| தாள் புரை தளிர் வைகும் தகை | தாளோடு கூடிய சிறந்த தளிர்களிலே தங்குகின்ற தன்மையை யுடைய | தோள் புரை இள வேயின் தொகுதிகள் இவை காணாய் | தோளையொத்த இவ்... மூங்கில் தொகுதிக... பாராய். |
| ஞிமிறு இவை காணாய் | இந்த தேனீக்களைக் காண் பாயாக; | | |

(பரத்வாஜ மஹர்ஷியின் வருணனை.)

222. குடையின னிமிர்கோலன் குண்டிகையினன் மூரிச்
சடையின னுரிமானின் சருமனன் மரநாரின்
உடையினன் மயிர்நாலு முருவினன் நெறிபேணும்
நடையினன் மறைநாலு நடைநவில் தருநாவான்.

223. செந்தழல் புரிசெல்வன் திசைமுக முனிசெவ்வே
தந்தன வுயிரெல்லாந் தன்னுயி ரென நல்கும்
அந்தண னுலகேழும் அமையெனி னமரேசன்
உந்தியி னுதவாமே யுதவிடு தொழில்வல்லான்.

| | | | |
|---|---|---|---|
| குடையினன் | குடையை வைத்துக் கொண்டிருப்பவனும் | மறை நாலும் நடம் நவில்தரு நாவான் | நான்குவேதங்களும் ந... தனஞ்செய்கின்ற நா... யுடையவனும்; |
| நிமிர்கோலன் | ஓங்கியதண்டத்தை ஏந்தி நிற்பவனும் | செம் தழல் புரி செல்வன் | செந்தழலோம்பும் ... னும் [நித்யாக்னி ஹோத்ரி.] |
| குண்டிகையினன் | கமண்டலுவைக் கொண் டிருப்பவனும் | திசைமுகமுனிசெவ்வே தந்தன உயிர் எல்லாம் | பிரமதேவன் படை... பிராணிகளை யெல்... |
| மூரி சடையினன் | நெருங்கிய ஜடாமண் டலத்தையுடையவனும் | தன் உயிர் என நல்கும் அந்தணன் | தன்னுயிரைப் போ... கருதிப் பாதுகாக்கி... காருணிகனும் |
| உரி மானின் சருமன் | உரிக்கப்பட்ட மான் தோலைப் போர்த்திருப்ப வனும் | உலகு ஏழும் அமை எனின் அமரேசன் உந்தியின் உதவாமே உதவிடு தொழில் வல்லான் | ஏழுலகங்களையும் ப... யென்றாலும் திரு... தன் நாபிகமலத்தினி... அண்டங்களை யுண்ட... காதிருக்கையிலும் ... ஸ்ருஷ்டி செய்ய வ... ஆற்றலுடைய... மாகிய; |
| நல் மரம் நாரின் உடையினன் | அழகிய நார்மடியை யுடுத்துள்ளவனும் | | |
| மயிர் நாலும் உருவினன் | மயிர் தொங்குகின்ற திரு மேனியையுடையவனும் | | |
| நெறி பேணும் நடையினன் | ஸன்மார்க்கத்தைத் தழுவி நடப்பவனும் | | |

["பரத்துவனெனுநாமப்பரமுனி—எதிர்கொளவந்தான்." என முன்கவியோடு முடியும்...

# 8. சித்திரகூடப் படலம்

ஸ்ரீராம லக்ஷ்மண ஸீதைகள் வனத்திற்குச் சென்று கொண்டிருக்கையில் சித்திரகூ... கிரியைக் கண்ட இராமபிரான் அம்மலையின் பல்வகை வளங்களையும் சீதாபிராட்டிக்கு... காட்டிக்கொண்டே அம்மலைச் சாரலிற் போக, அங்கிருந்த முனிவர் எதிர்கொண்டு அ... களைத் தமது ஆச்சிரமத்திற்கு அழைத்துக் கொண்டுபோய் உபசரிக்க, பிறகு லக்ஷ்மண... பாங்கானதோரிடத்தில் பர்ணசாலையமைக்க, அச்சாலையைக்கண்டு உகப்பு உண்டாயிரு... செய்தேயும் 'தம்பிக்குச் சிரமம் கொடுக்கும்படியாயிற்றே' என்று இராமன் வரு... இளையோன் இராமன் வருந்தியது கண்டு நொந்து கூற, இராமன் அவனைச் சமாதானப்படு... அந்தப் பர்ணசாலையிற் குடி புகுந்து அந்த மலையில் தானே உறைந்தமை கூறும் படலமி...

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



(மலைத்தாழ்வரையில் மலைப் பாம்புகள் படிந்திருப்பதை இராமன் பிராட்டிக்குக் காட்டுதல்.)

224. இடிகொள் வேழத்தை யெயிற்றொடு மெடுத்துடன் விழுங்கும்
கடிய மாசுணம் கற்றறிந்தவரென வடங்கிச்
சடைகொள் சென்னியர் தாழ்விலர்தாம் மிதித்தேறப்
படிகளாமெனத் தாழ்வரை கிடப்பன பாராய்.

| | | | |
|---|---|---|---|
| டி கொள்வேழத்தை எடுத்து | பிளிறும் யானையைப் பிடித்துக்கொண்டு | சடை கொள் சென்னியர் தாம் | ஜடா மண்டலதாரிகளான தாபஸர்கள் |
| எயிற்றொடும் | அவற்றின் தந்தங்களோடும் | தாழ்வு இலர் மிதித்து ஏற | தாமதமின்றி வேகமாக மிதித்தேற |
| ன் விழுங்கும் | —ஒருசேர விழுங்கவல்ல | படிகள் ஆம் என | —படிகள் போல |
| ய மாசுணம் | கொடிய மலைப் பாம்புகளானவை | தாழ்வரை | —மலையடிவாரங்களிலே |
| று அறிந்தவர் என அடங்கி | கற்றறிந்த பெரியோர் போல அடக்கத்தைமேற்கொண்டு | கிடப்பன பாராய் | கிடப்பவற்றைக் காண்பாயாக. |

யானையைத் தந்தங்களோடும் விழுங்குங் கொடுமையையுடைய மலைப்பாம்புகட்கு ம்முனிவரை விழுங்குவது ஒரு பெரிய பணியன்றெனினும், அவை தல மகிமையினால் க்கொடுமை தீர்ந்து, அம் முனிவர்கள் அடியிட்டு ஏறுதற்குப் படிபோல உதவுகின்றமை ட்டப்பட்டதாயிற்று. இவற்றின் அடக்கத்திற்குக் "கற்றறிந்தவரென வடங்கி" ன் உவமை கூறியது குறிக்கொள்ளத் தக்கது. "கற்றவரென வடங்கி" என்னாது ற்றறிந்தவரென வடங்கி' என்றது ஆழ்ந்துரைத்ததாம். கல்விக்குப்பயன்விநயமே யென்றறிந்தவ ரென்கை. .... .... .... .... *

(ராம லக்ஷ்மண ஸீதைகள் மாலைப் பொழுதில் குலதெய்வத்தைத் தியானித்தல்.)

225. மொய்யுறு நறுமலர் முகிழ்த்த வாஞ்சில
மையறு நறுமலர் மலர்ந்த வாஞ்சில
ஐயனோ டிளவலுக் கமிழ்தனாளுக்கும்
கைகளும் கண்களும் கமலம் போன்றவே.

| | | | |
|---|---|---|---|
| ாய் உறு நறு மலர் சில முகிழ்த்த ஆம் | இதழ்கள் நெருங்கி நறுமணம் மிக்க சுவையான மலர்களிற் சில மூடிக்கொண்டன; | ஐயனோடு இளவலுக்கு அமிழ்து அனாளுக்கும் | இராமபிரானுக்கும் இளையபெருமாளுக்கும் அமுதம் போன்றவளான சீதாபிராட்டிக்கும் |
| யும் அறு நறு மலர் சில மலர்ந்த ஆம் | குற்றமற்ற நறுமலர்களிற் சில மலர்ந்தன; (அப்போது) | கைகளும் கண்களும் கமலம் போன்றன | கைகளும் கண்களும் தாமரை மலரையொத்துக் குவிந்து கிடந்தன. |

மாலைப் பொழுதிற் சில மலர்கள் குவிவனவும் சில மலர்கள் அலர்வனவுமாக, ரப்போது ராம லக்ஷ்மண ஸீதைகள் கைகளைக் குவித்துக் கண்களை மூடிய வண்ணம் டித்து குலதெய்வத்தைச் சிந்தனை செய்தனரென்றவாறு. மாலைப் பொழுதில் தாமரை அடிக்கொள்ளும் மலராதலால் அதனை இங்கு உவமையாக எடுத்தது மிகப் பொருத்தம்.

(இளையோனமைத்த பர்ணசாலையில் இராமன் உவந்திருத்தல்.)

226. மாய நீங்கிய சிந்தனை மாமறை
தூய பாற்கடல் வைகுந்தஞ் சொல்லலாம்
ஆயசாலை யரும்பெற லன்பினன்
நேய நெஞ்சினன் விரும்பி நிரம்பினான்,

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



| | | | |
|---|---|---|---|
| மாயம் நீங்கியசிந்தனை | அவித்யையின்றித் தத்துவ ஞானத்தைக் கொண்ட ஞானிகளின் மனமும் | ஆய சாலை | இளையபெருமாள்ை அந்தப் பர்ணசாலைய் |
| மா மறை | —பெருமை பெற்றவேதமும் | அரும் பெறல் அன்பினன் | அருமையான அ ஞற் பெறுதற்கு உ ஞை அவ்விராமபிர |
| தூய பால் கடல் | பரிசுத்தமான திருப்பாற் கடலும் | நேயம் நெஞ்சின் விரும்பி நிரம்பினுன் | நேசம் மிக்க திரு ளத்தால்மகிழ்ந்துதிரு யடைந்திருந்தான் |
| வைகுந்தம் சொல்லல் ஆம் | ஸ்ரீவைகுண்டமும் என்று சொல்லுதற்குரிய | | |

(இளையோன் பர்ணசாலை சமைக்கும்படி நேர்ந்தது குறித்து இராமன் வருந்துதல்.)

227. அடருஞ் செல்வ மளித்தவ னுணையால்
படரு நல்லறம் பாலித் திரவியின்
சுடரு மெய்ப்புகழ் சூடினெ னென்பதென் ?
இடருனக் கிழைத்தேன் நெடு நா ளென்ருன்.

| | | | |
|---|---|---|---|
| அடரும் செல்வம் அளித்தவன் | நெருங்கிய ராஜ்யஸம் பத்தை எனக்குக் | இரவியின் சுடரும் மெய் புகழ்சூடினென் என்பது என் | சூரியன்போல் வி கின்ற உண்மை புகழை நான் பூ னென்று சொல்லு ஒரு பொருளோ? |
| ஆணையால் | கொடுக்கவிருந்த தசரத னது கட்டளையினுல் | | |
| படரும் நல் அறம் பாலித்து | காட்டிற்குச் செல்வ தாகிய சிறந்த தருமத் தைச் செய்வதாக மேற் கொண்டு | நெடு நாள் உனக்கு இடர் இழைத்தேன் என்ருன் | (லக்ஷ்மண!) பல உனக்குக் கஷ்ட யுண்டாக்கினேனே! என்று வருந் கூறினன். |

நான் காட்டிற்குச் சென்று பித்ருவாக்ய பரிபாலனமாகிய தருமத்தை நடத்து பெரிய ஸுக்ருத மென்பது கிடக்கட்டும்; இந்த வனவாஸம் உனக்கு நீண்ட க கஷ்டந் தருவதாக முடிந்ததே யென்று மனம் நொந்து கூறியவாறு. .... ....

சித்திரகூடப் படலம் முற்றிற்று.

---

9. பள்ளியடைப் படலம் :—தசரத சக்ரவர்த்திக்குச் சரமஸம்ஸ்காரம் நிகழ்த் செய்தியைத் தெரிவிக்கும் படலமென்பது கருத்து. இராமன் சித்திரகூடம் சேர்ந் கின்றனன். அயோத்திச் செய்தி யாதெனின்; வசிட்ட முனிவனுலனுப்பப்பட்ட தூதா கேகய நாட்டை யடைந்து ஓலையைக் கொடுத்துப் பரத சத்துருக்கனர்களை ஏழா நா கோசலநாடு கொண்டு சேர்த்தனர். நாட்டின் விபரீதமான நிலைமையைக் கண்டத ஒன்றுந் தோன்ருமல் திடுக்கிட்டுப் பரதன் அரண்மனைபுக்கு எல்லாச் செய்திகளை நொடிப்பொழுதில் தெரிந்துகொண்டு பலவாறு கதறியழுது தானே தேறி 'எனக்கு வித பந்துவும் இராமனேயாதலால் அவன்கழலை வணங்கினுலன்றி என் துயரம் தீர என்று நெடுநேரம் புலம்பி, தனக்கு ராஜ்யம் வேணுமென்று தன் தாய் செய்த தீ காக அவளைப் பலபடி பழித்துத் தன்னையும் வெறுத்துக்கொண்டு இன்னது செ தென்று தோன்ருமல் சிந்தைக் கடலிலாழ்ந்திருக்க, அப்போது வசிட்ட முனிவன் பரதனை நோக்கி 'இறந்தவர்க்குச் செய்யவேண்டிய கிரியைகளைச் செய்யவேண் என்ன, கோசலை அனுமதி தர, பிறகு பரதன் வசிட்ட முனிவனை வணங்கி அவனே போய்த் தந்தையினுடலைக் கண்டு புலம்ப, பின்னை வைதிகர்கள் மன்னவனுடலை விமா தேற்றி யானையின் மீது வைத்துச் சங்கு பேரி முதலியன ஒலிக்கச் சரயுவுக்குக்கொ போய்ச் சேர்த்து 'வீரனே! ஈமக் கடனைச் செய்வாயாக' என்ன; அப்போது கடன் செய்யுமாறு வந்த பரதனை வசிட்ட முனிவன் 'அன்னை தீமையால் உ மன்னவன் துறந்தான்; நீ கருமஞ் செய்ய உரியனல்லை' என்று தடுக்க, பரதன் நிலைமைக்கு மிகவும் வருந்தி நிற்க, பின்பு முனிவன் சத்துருக்கனனைக் கொண்டு

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



கடனைச் செய்வித்தான். அப்பால் பரதன் மனைக்குத் திரும்பிப் பத்து நாளும் ஆசௌச மிருந்து எல்லாக் கிரியைகளும் முடிந்த பிறகு, நாடு அராஜகமாய்க் கிடக்கலாகாதென்று துணிந்த மந்திரக் கிழவரும் அந்நாட்டினரும் வசிட்ட முனிவனும் பரதனைக் கூடினர்க ளென்பது இங்குக் கதை. .... .... .... ....

(நடந்த செய்தியைக் கைகேயி பரதனுக்குக் கூறுதல்.)

228. வாக்கினால் வரந்தரக் கொண்டு மைந்தனைப்
போக்கினேன் வனத்திடைப் போக்கிப் பாருனக்கு
ஆக்கினே னவனது பொறுக்கலாமையால்
நீக்கினான் தன்னுயிர் நேமி வேந்தென்றாள்.

| | |
|---|---|
| வாக்கினால் | —(மன்னவன்) தன் வாயினால் |
| வரம் தர | நான் கேட்ட இரண்டு வரங்களைக் கொடுக்க |
| கொண்டு | அவற்றைப் பெற்றுக் கொண்டு (அதனால்) |
| மைந்தனை வனத்திடை போக்கினேன் | இராமனை வனத்திற்குப் போகும்படி செய்தேன்; |
| போக்கி | —அப்படியனுப்பிவிட்டு |
| பார் உனக்கு ஆக்கினேன் | ராஜ்யத்தை உன்னுடையதாக ஆக்கினேன்; |
| நேமி வேந்து அவன் | —தசரத மன்னவன் |
| அது பொறுக்கலாமையால் | இராமனுடைய வனவாஸத் துயரத்தைத் தாங்கமாட்டாமல் |
| தன் உயிர் நீக்கினான் | —இறக்கப்பெற்றான்; |
| என்றாள் | —என்றனள் கைகேயி. |

(பரதனது சினத்தின் செய்கை.)

229. துடித்தன கபோலங்கள் சுற்றுந் தீச்சுடர்
பொடித்தன மயிர்த்தொளை புகையும் போர்த்தது
மடித்தது வாய் நெடு மழைக்கை மண்பக
அடித்தன வொன்றொடொன்று அசனியஞ்சவே.

| | |
|---|---|
| கபோலங்கள் துடித்தன | கன்னங்கள் துடித்துக் கொண்டிருந்தன; |
| மயிர் தொளை சுற்றும் தீ சுடர் பொடித்தன | மயிர்க் குழிகள் நாற்புறமும் அனற் கொழுந்துகளை அரும்பின; |
| புகையும் போர்த்தது | புகையும் நாற்புறமும் பரவியது; |
| வாய் மடித்தது | உதடு மடித்துக் கொண்டது; |
| மழை நெடு கை | மேகம் போன்ற உதாரமான நீண்ட கைகள் |
| அசனி அஞ்ச | இடியும் அஞ்சும்படி (பேரொலி பிறக்க) |
| மண் பக ஒன்றொடு ஒன்று அடித்தன | பூமி பிளக்கும்படி ஒன்றையொன்று அடித்துக் கொண்டது. |

இவையெல்லாம் மிக்க சினத்தின் அடையாளங்களாகத் தோன்றியவை.

(பரதன் கைகேசியையும் தன்னையும் பழித்துக் கூறுதல்.)

230. நோயீரல்லீர் நுங்கணவன்றன் னுயிருண்டீர்
பேயீரே நீரின்னமிருக்கப் பெறுவீரே
மாயீர் மாயாவன்பழிதந்தீர் முலைதந்தீர்
தாயீரே நீரின்னுமெனக்கென் தருவீரே.

| | |
|---|---|
| நும் கணவன் தன் உயிர் உண்டீர் | உமது பர்த்தாவின் பிராணனை முடித்திட்டீர்; (என்றாலும்). |
| நோயீர் அல்லீர் | — நோய்போல்வீரல்லீர்; |
| நீர் பேயீரே | நீர் பேய்த்தன்மையுடையவரே; (இப்படிப் பட்டநீர்) |
| இன்னும் இருக்க பெறுவீரே | இன்னும் உயிரோடிருக்கத் தகுமோ? |
| மாயீர் | உடனே இறந்து படுவது நலம்; |
| முலை தந்தீர் | இளமையில் முலை கொடுத்து வளர்த்தீர்; |
| மாயா வன் பழி தந்தீர் | (இப்போது) சாசுவதமான கொடிய பழியையும் தந்தீர்; |
| தாயீரே நீர் | உண்மையில் எனக்குத் தாயாரல்லீர் நீர்; |
| இன்னும் என் தருவீரே | இன்னமும் எனக்கு என்னென்ன ஆபத்துக்களை விளைவிக்கப் போகின்றீரோ? |

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

உலகத்தில் அவரவர்கள் நோயினால் சாவதுண்டு; நோயென்பது சிறிதுகாலம் பிடித்து உயிரைப் போக்கும்; அங்ஙனமின்றித் திடீரென்று அறைந்து உயிரைக்கொள்வது பேயேயாதலால் " நுங்கணவன்றன்னுயிருண்டீர் நோயீரல்லீர் பேயீரே நீர்" எனப்பட்டது.

(இதுவுமது.)

231. *வில்லார் தோளான் மேவினன் வெங்கானகமென்ன*
*நல்லான் ஐயன் துஞ்சினன் நஞ்சேயனையாளைக்*
*கொல்லேன் மாயேன் வன்பழியாலே குறைவற்றே*
*னல்லேனோயான் அன்புடையார்போ லழுகின்றேன்.*

| | | | |
|---|---|---|---|
| *வில் ஆர் தோளான் வெம் கானகம் மேவினன் என்ன* | வில் வீரனான இராமன் காடு சென்றானென்று சொல்லக்கேட்டும் | மாயேன் யான் | இத்தீமைக்கெல்லாங் காரணமாகிய என்னை மாய்த்துக் கொள்ளாமலிருப்பவனாயுமுள்ள நான் |
| *நல்லான் ஐயன் துஞ்சினன்* | சிறந்த சக்ரவர்த்தி அத்துயரைத்தாங்கமாட்டாது உயிர் நீங்கினான்; (இராமனைக் காடேறப் போக்கியவள் என் தாயாகிய கைகேயி யென்பதையறிந்தும்) | அன்பு உடையார் போல் அழுகின்றேன் | அன்புடையாரைப் போலப் பாவித்துக் கண்ணீர் வடிக்கின்றேன், |
| *நஞ்சே அனையாளை* | விஷம்போற் கொடியவளான அவளை | வன் பழியாலே குறைவு அற்றேன் அல்லேனோ | 'இவன் இராமனிடத்து அன்பு இல்லாதிருக்கையில் அன்புடையார்போல நடிக்கும் வேஷக்காரன்; இவனே இராமனைக் காட்டிற்கு அனுப்பிய பாவி, என்று உலகத்தார் தூற்றும் கொடிய பழி நிரம்பியிருக்கப் பெற்றவனல்லேனோ நான்? |
| *கொல்லேன்* | —கொல்லாதவனாயும் | | |

(இதுவுமது.)

232. *பாரோர் கொள்ளார் யானுயிர்பேணிப் பழிபூணேன்*
*தீராதொன்றானும் பழியூரில் திருநில்லாள்*
*ஆரோடெண்ணிற்று ஆருரைதந்தார் அறமெல்லாம்*
*வேரோடுங்கே டாகமுடித்தென் விளைவித்தாய்,*

| | | | |
|---|---|---|---|
| பாரோர் கொள்ளார் | யான் அரசாள்வதை உலகத்தவர் யாரும் யுக்தமென்று கொள்ளமாட்டார்; | ஒன்றானும் பழி தீராது | (நான் அரசை மேற்கொண்டால்) ஒருவகையாலும் பழி நீங்காது, |
| *யான் உயிர் பேணி பழி பூணேன்* | யான் அரசச் செல்வத்தோடு வாழும் உயிர் வாழ்க்கையை விரும்பி தமையனைக்காட்டிற்குத் துரத்தி விட்டுத் தம்பி அரசுபுரிகின்றானென்று உலகோர் கூறும் பழிமொழிக்கு இடங்கொடுப்பேனல்லேன். | *ஊரில் திரு நில்லாள்* | முறை திறம்பியஇவ்வூரில் இனி இலக்குமியும் வாழாள்: |
| | | என்னிற்று ஆரோடு | நீ யாரோடு கலந்து ஆலோசனை செய்தது? |
| | | உரை தந்தார் ஆர் | உனக்கு ஆலோசனை சொல்லியவர் யாவர்? |
| | | அறம் எல்லாம் வேரோடும் கேடு ஆக முடித்து என் விளைவித்தாய் | தருமமெல்லாம்அடியோடு கெடும்படியான தொழிலைச் செய்திட்டு என்ன பயன் கண்டாய் ? |

(இதுவுமது.)

233. *சிறந்தார் சொல்லும் நல்லுரை சொன்னேன் செயலெல்லாம்*
*மறந்தாய் செய்தா யாகுதி மாயா வுயிர்தன்னைத்*
*துறந்தாயாகில் தூயையுமாதி யுலகத்தே*
*பிறந்தாயாதி யீதலதில்லைப் பிறிதென்றான்.*

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



| | | | |
|---|---|---|---|
| சிறந்தார் சொல்லும் நல்உரைசொன்னேன் | அறிவிற் சிறந்தவர்கள் சொல்லக் கூடிய சிறந்த வார்த்தைகளைச் சொன்னேன்; | தூயையும் ஆதி | பாவம் நீங்கிப் பரிசுத்தையுமாவாய்; |
| மாயா உயிர் தன்னை துறந்தாய் ஆகில் | இன்னும் முடியாதிருக்கின்ற உன் பிராணனை முடித்துக் கொண்டாயாகில் | உலகத்தே பிறந்தாய் ஆதி | உலகத்திற் பிறந்ததனால் பெறலாகும் பயனைப் பெற்றவளுமாவாய்; |
| செயல் எல்லாம் மறந்தாய் செய்தாய் ஆகுதி | நீ செய்த கொடிய செய்கைகளையெல்லாம் மனஸ்கரித்தல்லாமல் நினைவின்றியே செய்தவளாவாய்; | ஈது அலது பிறிது இல்லை | நீ பழி நீங்கி நன்மையடைதற்குரிய வழி இது தவிர வேறொன்றில்லை |
| | | என்றான் | என்று கூறி முடித்தான் பரதன். |

(கௌசலைக்குத் தெளிவு பிறக்குமாறு பரதன் சபதஞ் செய்தல்.)

234. பொய்க்கரிகூறினேன் போருக்கஞ்சினேன்
கைக்கொளுமடைக்கலங் கரந்து வவ்வினேன்
எய்த்திடத் திடர்செய்தோ னென்றின்னோர்புகும்
மெய்க்கொடு நரகிடை விரைவின் வீழ்க யான்.

(இராமன் காடு புக்கதற்கு யான் உடந்தையா யிருந்திருப்பேனாயின்)

| | | | |
|---|---|---|---|
| பொய் கரி கூறினேன் | நீதி மன்றத்தில் பொய்ச் சாக்ஷி சொன்னவனும் | எய்த்த இடத்து இடர் செய்தோன் | ஒருவர் தமக்குக்கஷ்டம் நேர்ந்து வருந்துகையில் பின்னும் அவர்க்குத் துன்பத்தை விளைத்தவனும் |
| போருக்கு அஞ்சினேன் | யுத்தஞ் செய்ய அஞ்சி நின்றவன் | என்ற இன்னோர்புகும் கொடு மெய் நரகிடை விரைவின்யான் வீழ்க | ஆகிய இத்தன்மையோரடைகின்ற கொடிய நரகத்தில்இன்றேயான்வீழ்க |
| கைக்கொளும் அடைக்கலம் கரந்து வவ்வினேன் | கையிற் கொண்டுள்ள அடைக்கலப் பொருளை மறைந்து நின்று பறித்துக் கொண்டு சென்றவனும் | | |

(இதுவுமது)

235. அந்தணருறையுளை யனலியூட்டினேன்
மைந்தரைக் கொன்றுளோன் வழக்கிற் பொய்த்துளோன்
நிந்தனை தேவரை நிகழ்த்தினேன் புகும்
வெந்துயர் நரகத்து வீழ்க யானுமே,

| | | | |
|---|---|---|---|
| அந்தணர் உறை உளை அனலி ஊட்டினேன் | பிராமணர் தம்இல்லத்தில் தீப்பற்றவைத்தவனும் | தேவரை நிந்தனை நிகழ்த்தினேன் | தேவதைகளை (காரணமின்றி)ப் பழித்தவனும் |
| மைந்தரை கொன்றுளோன் | சிசு ஹத்தி செய்தவனும் | புகும் வெம் துயர் நரகத்து யானும் வீழ்க | அடையக்கூடிய கொடிய நரகத்தில் யானும் வீழ்வேனாக. |
| வழக்கில் பொய்த்து உளோன் | தான் நீதிபதியாயிருந்து வழக்கில் தவறாக நியாயத்தைத் தீர்த்தவனும் | | |

(பரதன் சொல்லியது கேட்டுத் தெளிந்த கோசலை அவனைப் புல்லுதல்.)

236. தூய வாசகஞ் சொன்ன தோன்றலைத், ஏய கானகத் திருவி னீங்கி முன்
போயினான் வரக்கண்ட பொம்மலா ளாயவன்பினை லழுதுபுல்லினாள்,

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



| | | | |
|---|---|---|---|
| தூய வாசகம் சொன்ன தோன்றலை | தன் மனத்தூய்மையை வெளியிட்டுக் கூறின பரதனை | கண்டபொம்மலாள் | மகிழ்ச்சியை யுடையளான கோசலை |
| திருவின் நீங்கி தீய கானகம் முன் போயினன் வர | அரச சம்பத்தையிழந்து கொடிய காட்டிற்குமுன்பு சென்ற ஸ்ரீராமன் திரும்பி வரப் பார்த்தாற் போன்ற | அழுது | —கண்ணீர் விட்டு |
| | | ஆய அன்பினுல் | அப்பரதனிடத்துத் தோன்றிய அன்பினுலே |
| | | புல்லினுள் | அவனைத்தழுவிக்கொண்டாள். |

(பிரேத சரீரத்தோடு சரயுவையடைதல்.)

237. மாவும் யானையும் வயங்குதேர்களும், கோவுநான் மறைக்குழுவு முன்செலத் தேவிமாரொடுங் கொண்டு தெண்டிரை, தாவுவார்புனற் சரயு வெய்தினுர்.

| | | | |
|---|---|---|---|
| மாவும் யானையும் வயங்கு தேர்களும் | குதிரைகளும் யானையும் விளங்குகின்ற தேர்களும் | தேவிமாரொடும் | அந்த மன்னவனது மனைவிமாருடன் |
| கோவும் | —அரசர்களும் | தெண் திரை தாவு வார்புனல் சரயு | தெளிவான அலைகள் தாவி விழப்பெற்ற மிக்க நீரையுடைய ஸரயூ நதியை |
| நால் மறை குழுவும் | நால்வேதம்வல்ல அந்தணர் கூட்டமும் | எய்தினுர் | —அடைந்தார்கள். |
| முன் செல | —முன்னே போக | | |
| கொண்டு | சக்ரவர்த்தியின் பிரேத சரீரத்தை யெடுத்துக் கொண்டு | | |

(ஈமக்கடன் செய்யவந்த பரதனைத் தந்தையின் கட்டளையைத் தெரிவித்து வசிட்டன் தடுத்தல்.)

238. என்னும் வேலையி லெழுந்த வீரனை, அன்னை தீமையா லரசன் நின்னையும் துன்னு துன்பத்தால் துறந்து போயினன்,முன்னரேயெனமுனிவன் கூறினுன்.

| | | | |
|---|---|---|---|
| என்னும் வேலையில் | ஈமக்கடன் செய்ய வேண்டிய ப்ரஸ்தாவம் விளைந்த போது | அரசன் அன்னை தீமையால் துன்னு துன்பத்தால் முன்னரே நின்னையும் துறந்து போயினுர் | '(பரதனே!) தசரத சக்ரவர்த்தி உன் தாயின் தீய குணத்தால் மனத் துண்டான துன்பத்தால் முன்னமே உன்னுறவையும் ஒழித்திட்டு இறந்தான்' |
| எழுந்த வீரனை | ஈமச் சடங்கு புரிய எழுந்துவந்த பரதனை நோக்கி | | |
| முனிவன் | —வசிட்ட முனிவரானவர் | என்று கூறினுன் | —என்று சொன்னுர். |

சக்ரவர்த்தி கைகேயியையும் பரதனையும் வசிட்டனைச் சாக்ஷியாகக் கொண்டு உறவு துறந்தமையை "இன்னே பலவும் பகர்வா னிரங்காதானை நோக்கிச், சொன்னே னின்றே யிவளென் தாரமல்லள் துறந்தேன்; மன்னே யாவான் வருமப் பரதன்தனையும் மகனென், றுன்னேன் முனிவா அவனும் ஆகா னுரிமைக் கென்றுன்" என நகர் நீங்குபடலத்துச் செய்யுளினுலறிக.

(சக்ரவர்த்தியின் கிரியையாவும் முடிந்தபின் வசிட்டன் ராஜ்யத்தை நடப்பிக்குமாறு ஆலோசிக்கப் பரதனை வந்து சேர்தல்.)

239. முற்று முற்றுவித் துதவி மும்மைநூல்
சுற்றம் யாவரும் தொடரத் தோன்றினுன்
வெற்றி மாதவன் வினைமுடித்தவன்
கொற்றவேல் நெடுங் குமரற் கூடினுன்.

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



| | | | |
|---|---|---|---|
| முற்றும் உதவி முற்று வித்து | சடங்குகளையெல்லாம் உடனிருந்து முடிப்பித்து | சுற்றம் யாவரும் தொடர | இனத்தவரான அந்தணர் யாவரும் தொடர்ந்துவர |
| வினை முடித்தவன் | வினையினின்று நீங்கினவனாகிய | தோன்றினன் | தன்னிருக்கையினின்று வெளிப்பட்டவனாய் |
| வெற்றி மாதவன் | வெற்றி பெற்ற பெருந்தவத்தையுடையவனாகிய வசிட்ட முனிவன் | கொற்றம் வேல் நெடு குமரன் கூடினன் | வெற்றி பெற்ற வேற்படையைக் கொண்ட பரதனிடம் வந்து சேர்ந்தான். |
| மும்மை நூல் | முப்புரி நூலாயமைந்த யஜ்ஞோபவீத மணிந்த | | |

(நாடு அராஜகமாயிருப்பது கூடாதெனல்)

240. மன்னரின்றியே வையம் வைகல்தான்
தொன்மையன்றெனத் துணியுநெஞ்சினர்
அன்ன மாநிலத்தறிஞர் தம்மொடும்
முன்னை மந்திரக்கிழவர் முந்தினர்.

| | | | |
|---|---|---|---|
| முன்னை மந்திரம் கிழவர் | தொன்று தொட்ட ஆலோசனைக்குரிய மந்திரிமார் | துணியும் நெஞ்சினர் | மன்னவனை நியமிக்க வேணுமென்று. உறுதிகொண்ட மனத்தராய் |
| வையம் மன்னர் இன்றியே வைகல் தொன்மை அன்று என | 'இந்த ராஜ்யம் அராஜகமாயிருப்பது முறைமையன்று' என்ற காரணத்தினால் | அன்ன மா நிலத்து அறிஞர் தம்மொடும் | அந்தப் பெரிய ராஜ்யத்திலுள்ள ஞானிகளான பெரியோர்களுடனே |
| | | முந்தினர் | —முற்பட்டு வந்தனர். |

பள்ளியடைப் படலம் முற்றிற்று.

# 10. ஆறு செல்படலம்

பரதன் சித்திரகூடத்துக்குப் பயணப்பட்டுச் சென்ற கதையைச் சொல்லும் பகுதி யென்றவாறு. ஆறு—வழி. வழி சென்ற கதை கூறும் படலமென்க. வசிட்டன் சுமந்திரன் முதலானவர்கள் பரதனை எவ்வளவு வேண்டியும் அவன் "அரசமர்ந்தானடிசூடு மரசை யல்லால் அரசாக வெண்ணேன் மற்றரசு தானே" என்று திடமான தன் மனவுறுதியை வெளியிட்டு 'இராமபிரானை அழைத்துவந்து முடிசூட்ட முயல்வேன்; அன்னவன் இணங்காவிடின் அவனுடன் கானகத்து வசிப்பேன், மாறுகூறின் உயிர் துறப்பேன்' என்று கூற, அதுகேட்ட சபையோர் பரதனது அத்யவஸாயத்திற்கு வியந்து நிற்க, உடனே சேனைகளைச் சன்னுகப்படுத்தி யாவரும் இராமனை யழைத்துவர மனக்கிளர்ச்சிகொண்டு புறப்பட்டனர். பரதன் தன்னரையில் சீரைசாத்தி முனிவர் கோலத்துடனே தம்பியுடன்வர, தாயரும் தவத்தவரும் மந்திரிமாரும் அளவில் சுற்றமும் அந்தணரும் தொடர்ந்துவரத் தேரின்மீது சென்று, பிறகு நடந்து சென்றனனென்பது இப்படலத்துக் கதைச் சுருக்கம். ... ...

(இப்படலத்தினின்று செய்யுள் ஒன்றும் கொள்ளப்படவில்லை.)

# 11. குகப் படலம்

பயணப்பட்ட பரதாழ்வான் குகப்பெருமாளைச் சேர்ந்ததைத் தெரிவிக்கும் படலமிது. பரதன் கோசலநாட்டைக்கடந்து கங்கைக்கரையை அடைந்தானுக், சேனைகள் கங்கை நீரைக் கலக்கலாயின. அப்போது குகன் சேனையோடு பரதன் வருவது கண்டு 'இவன் நம்பி



CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



ராமனைக் காட்டுக்குத் துரத்தியதோடு நில்லாமல் அங்குந் துரத்தவருகிறுன் போலும்' எ கருதிச் சினம் பொங்கி யுத்தசன்னத்தனுகித் தென்கரை வந்து அட்டகாசம் செய்து நி னன். அப்போது சுமந்திரன் குகன் வந்து நின்றதைப் பரதனுக்குத் தெரிவிக்க, பர நானே அவனைக் காணச் செல்வேன். என்று செல்ல வரும் பரதனது நிலையைக் கன் குகன் திடுக்கிட்டுப் பரதனையணுகி வணங்க, பரதன் குகனைத் தழுவ, குகன் பரதனை வ காரணம் வினவ, அவன் உள்ளது உள்ளபடியே சொல்ல, அது கேட்ட குகன் பர தன்மையைக் கொண்டாடிப் பாராட்டியது முதலிய செய்திகளைக் கூறுமிப்படலம்.

(பரதனிடம் அதிசங்கை கொண்ட குகனுடைய பேச்சுக்கள்.)

241. *அஞ்சனவண்ண னென்னுயிர் நாயக னளாமே*
*வஞ்சனையா லரசெய்திய மைந்தரும் வந்தாரே*
*செஞ்சர மென்பன தீயுமிழ்கின்றன செல்லாவோ*
*உஞ்சிவர் போய்விடின் நாய்க்குகனென்றெனை யோதாரோ.*

| | | | |
|---|---|---|---|
| என் ஆர் உயிர் நாயகன் | எனது அருமைப் பிராண நாதனுகிய | செம் சரம் என்பன | (எனது) சிவந்த அம்[பு] எனப் படுபவை |
| அஞ்சனவண்ணன் ஆளாமே | கரிய கோலக்காகுத்தன் அரசாட்சி செய்ய முடியாதபடி | செல்லா ஓ | இப்பரதன் மேல் செ[ல்ல] மாட்டாவோ ? |
| வஞ்சனையால் அரசு எய்திய மன்னரும் வந்தாரே | வஞ்சனை வழியினுல் ராஜ்யத்தை யடைந்த பிரபுவும் இங்கு வந்துவிட்டாரோ? | இவர் உஞ்சு போய் விடின் | இவர் எனது அம்புக்[கு] தப்பிப் பிழைத்து போய்விட்டால் |
| தீ உமிழ்கின்றன | நெருப்பைக் கக்க வல்லவையான | நாய் குகன் என்று எனை ஓதாரோ | நீசனிவனென்று உல[க]த்தார் என்னை இகழாரே[ா] |

உலகில் நாய்கள் நன்றியறிவிற் சிறந்தவையென்று புகழ் பெற்றிருக்கவும், நாய்கள் எதிரிகளிடும் தின்பண்டங்களைத் தின்றுகொண்டு வாளாவிருத்தலுமுண்டு; அ கருதி "நாய்க் குகனென்று எனையோதாரோ ?" என்றதாகக் கொள்ளுதல் சிறக்கும்.

242. *ஆழநெடுந்திரை யாறுகடந்திவர் போவாரோ ?*
*வேழநெடும்படை கண்டு விலங்கிடும் வில்லாளோ ?*
*தோழமையென்றுஅவர் சொல்லியசொல்லொரு சொல்லன்றோ ?*
*ஏழமைவேட னிறந்திலனென்றெனை யேசாரோ ?*

| | | | |
|---|---|---|---|
| இவர் | —இப்பரதன் | | அவ்விராமன் என்னைத் தோழனுகக் கொண் சொல்லிய வார்த்தை எப்படிப்பட்டது! (அந் நட்புக்கு ஏ நான் கடவாவிட்டா |
| ஆழம் நெடு திரை ஆறு கடந்து போவாரோ | ஆழத்தையும் நீட்சியையும் அலைகளையுமுடைய கங்கையாற்றை(என்னுதவியில்லாமல்) தாண்டிப் போக வல்லவரோ ? | தோழமை என்று அவர் சொல்லிய சொல் ஒரு சொல் அன்றோ | |
| வேழம் நெடு படை கண்டு விலங்கிடும் வில் ஆளோ | நான் யானைச் சேனைகளைக் கண்டு அஞ்சி நடுங்கி விலங்கிப் போகும் வில் வீரனே ? | ஏழமை வேடன் இறந்திலன் என்று எனை ஏசாரோ | எளியனுன இவ்வேட (இங்ஙனம் மான கெட்டு வாழ்வ விட) இறந்திருக்கலா தா வென்று என் உலகத்தார் பழி மாட்டாரா? |

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



(சுமந்திரன் பரதனுக்குக் குகனைத் தெரிவிப்பது)

243. கங்கையிரு கரையுடையான் கணக்கிறந்தநாவாயான்
உங்கள்குலத் தனிநாதற்கு உயிர்த்துணைவ னுயர்தோளான்
வெங்கரியி னேறனையான் விற்பிடித்த வேலையினான்
கொங்கலரு நறுந்தண்டார்க் குகனென்னுங் குறியுடையான்.

(கருத்துரை) கங்கா நதியின் இரண்டு கரைகளையும் தனக்குச் சொந்தமாக வுடைய னும், அளவுகடந்த படகுகளை யுடையவனும், உங்கள் குலந்தலைவனான இராமபிரானுக்கு யிர்த்தோழனும், மஹாபுஜசாலியும், மதகரியை யொத்தவனும், வில்லேந்திய சேனை சமுத் ரத்தை யுடையவனும், பரிமளம் வீசுகின்ற குளிர்ந்த மாலையை யணிந்துள்ளவனுமான வன் குகனென்னும் வேடர் தலைவன்.

(பரதனது நிலையைக் கண்ட குகன் நடுக்கிடுதல்.)

244. வற்கலையி னுடையானை மாசடைந்த மெய்யானை
நற்கலையின் மதியென்ன நகையிழந்த முகத்தானைக்
கற்கனியக் கனிகின்ற துயரானைக் கண்ணுற்றான்
விற்கையினின் றிடைவீழ விம்முற்று நின்றொழிந்தான்.

(கருத்துரை) மரவுரியை ஆடையாக அணிந்து கொண்டிருப்பவனும், புழுதிபடிந்த டம்புடையவனும், அழகிய கலைகளில்லாத சந்திரன்போல ஒளியிழந்த முகத்தையுடைய னும், காண்கின்ற கல்லும் குழைந்துருகும்படி மிகுகிறதுன்பத்தையுடையவனுமான தனைக் குகன்கண்டு, தன் கையினின்று வில் நழுவிக் கீழே விழும்படி கலங்கிச் செயலற்று ன்றிட்டான்.

(குகன் பரதசத்துருக்கனரின் நிலையைக் கருதுதல்.)

245. நம்பியுமென் னாயகனை யொக்கின்றா னயல்நின்றான்
தம்பியையு மொக்கின்றான் தவவேடந் தலைக்கொண்டான்
துன்பமொரு முடிவில்லை திசைநோக்கித் தொழுகின்றான்
எம்பெருமான் பின்பிறந்தார் இழைப்பாரோ பிழைப்பென்றான்.

(கருத்துரை) புருஷச்ரேஷ்டனான இப்பரதனும் எனது தலைவனாகிய இராமபிரானை யொத்திருக்கின்றான்; அருகில் நின்ற சத்துருக்கனனும் ராமாநுஜனான லக்ஷ்மணனை யொத்தி க்கின்றான். இவன் படுகிற துன்பத்திற்கோ ஒரெல்லையில்லை; இராமன் சென்ற தென் சையை நோக்கி வணங்குகின்றான்; இராமன் தம்பியர் ஒருகாலும் பிழைசெய்யார்-என்றான்.

(குகன் பரதனைப் புகழ்வது.)

246. தாயுரைகொண்டு தாதை யுதவிய தரணிதன்னைத்
தீவினையென்ன நீத்துச் சிந்தனை முகத்திற்றேக்கிப்
போயினை யென்றபோழ்து புகழினோய் தன்மைகண்டால்
ஆயிரமிராமர் நின்கே ழாவரோ தெரியினம்மா.

(கருத்துரை) மஹாகீர்த்தியை யுடைய பரதனே! உனது தாயாகிய கைகேயியின் வார்த்தையைக் கேட்டு உனது தந்தை உனக்குக் கொடுத்த ராஜ்யத்தை மஹாபாபமென்று விட்டுத் தொலைத்து, கவலையை முகத்தில் நிறைத்துக்கொண்டு இங்கு வந்துள்ளாய் என் தை நோக்குமிடத்து, ஆலோசித்துச் சொல்வதானால் ஆயிரம் ஸ்ரீராமர் உளரானாலும் டன்னொருத்தனுக்கு ஒப்பாவரோ ?

குகப்படலம் முற்றிற்று

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



# 12. திருவடி சூட்டுபடலம்

பரதாழ்வான் சக்ரவர்த்தி திருமகனுரை வனத்தினின்று மீட்டுக்கொணர்ந்து மகுடா ஷேகம் செய்வித்து மகிழக் கருதிச் சித்திரகூட மலையைச் சார்ந்து பெருமாளைப் பலவா வேண்டவும் அவர் பித்ருவாக்கிய பரிபாலனத்தின் அவசியத்தைக்கூறி மறுத்திட, பிற பரதாழ்வான் பெருமாளுடைய பாதுகையை இறந்து பெற்று முடிக்கு அணியாகச் சூட்டி கொண்டு சென்றதைக் கூறும் படலமிது. நூற்று நாற்பத்தொரு செய்யுள்கள் கொண் இப்படலத்தினின்று சில செய்யுட்கள் கொள்ளப்படுகின்றன.

(லக்ஷ்மணன் பரதசேனையைக் கண்டு அதிசங்கித்துச் சீற்றங்கொண்டு அதனைப் பெருமாளிடம் கூறுதல்.)

247. ப்ரதனிப் படைகொடு பார்கொண்டாள்மறம்,
கருதியுட் கிடந்ததோர் கறுவு காதலால்
விரதமுற் றிருந்தவன் மேல்வந்தானிது,
சரதமற் றிலதெனத் தழங்கு சீற்றத்தான்.

248. குதித்தனன் பாரிடைக் குவடு நீறெழ,
மிகுத்தனனி ராமனை விரைவி னெய்தினுன்
மதித்திலன் பரதனின் மேல்வந்தான் மதிற்,
பதிப்பெருஞ் சேனையின் பரப்பினுனென்றுன்,

| | | | |
|---|---|---|---|
| பரதன் | —பரதனுனவன் | என தழங்கு சீற்றத் தான் | என்றெண்ணி மிக்ககோ முடையவனுகி |
| பார் கொண்டு ஆள் மறம் கருதி | பூமியை யெல்லாம் தன்ன தாக்கிக் கொண்டு தானே யரசாள வேண்டுமென்ற கொடுந் தொழிலை யெண்ணி | குவடு நீறு எழ மிதித்தனன் | அம்மலையின் கொடுமு பொடிபடும் ப கொடிய விசையோ மிதித்து |
| | | பாரிடை குதித்தனன் | கீழே குதித்து |
| உள் கிடந்தது ஓர் கறுவு காதலால் | தன் மனத்திலடங்கிக் கிடந்த தொரு கறுவோடு கூடிய பேராசையினுல் | இராமனை விரைவின் எய்தினுன் | பெருமாளிடம் விரைந் சென்றவனுகி (அவ நோக்கி) |
| இ படை கொடு | இந்தச் சேனையைக் கூட்டிக் கொண்டு | பரதன் மதித்திலன் | 'பரதன் உம்முடை பெருமையைச் சிறித ஸஹிக்க மாட்டா வனுய் |
| விரதம் உற்று இருந்தவன் மேல் வந்தான், | தந்தை சொற்பேணுதலாகிய விரதத்தை மேற்கொண்டிராநின்ற நம்மிராமனை எதிர்க்க வந்தான்; | மதில் பதி பெரு சேனையின் பரப்பினுன் | மதிள் சூழ்ந்த அயோத் நகரத்துள்ள பெரி சேனையின் தொகு யுடனே |
| இது சரதம் | —இது ஸத்தியமானது; | நின் மேல் வந்தான் என்றுன் | உம்மீது படையெடு வந்து கொண்டிருக்கி னென்றனன். |
| மற்று இலது | —வேறொன்றுமில்லை; | | |

(லக்ஷ்மணன் வீரவாதமாகக் கூறுவது.)

249. இருமையு மிழந்தவப் பரத னேந்துதோள்,
பருமையு மன்னவன் படைத்த சேனையின்,
பெருமையும் நின்னொரு பின்புவந்தவென்
னெருமையுங்கண்டினி யுவத்தி யுள்ள நீ.

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



| | | | |
|---|---|---|---|
| ருமையும் இழந்த அ பரதன் | இஹலோக பரலோக சுகங்களை யிழந்தவனை அப் பரதனுடைய | அன்னவன் படைத்த சேனையின் பெருமையும் | அவன் திரட்டிக் கொணர்ந்த சேனையின் பெருமையையும் |
| து தோள் பருமையும் | உயர்ந்த தோள்கள் பருத்திருக்குந் தன்மையையும் | நின் பின்பு வந்த ஒரு என் ஒருமையும் | உன் பின்னே பிறந்த தனியனான எனது ஒப்பின்மையையும் |
| | | இனி கண்டு நீ உள்ளம் உவத்தி | இப்பொழுது நீ பார்த்து மகிழ்வாய். |

, பரதனது தோள்களின் பூரிப்பும் அவனது சேனையின் பெருந்தொகையும் பழுதாம்படி ஒருவனே் கணப்பொழுதில் செய்திடுவேனென்று இளையோன் தன்னில் தான் கூறினனென்றறு........

(இதுவுமது.)

250. ஆழிவெங் கடகரி துரகராசிகள்,
பாழிவன் புயத்திகல் வயவர் பட்டற
ஆழிவெங் குருதியா லலைந்து வேலைகள்,
ஏழு மொன்ருகி நின்றிரப்பக் காண்டியால்,

| | | | |
|---|---|---|---|
| ழி வெம் கட கரி துரகம் ராசிகள் | முகபடாத்தை யணிந்த வெவ்விய மத யானைகளும் குதிரைக் கூட்டங்களும் | ஆழி வெம் குருதியால் அலைந்து | (அவற்றி னுடலினின்று பெருகிய) கடல் போன்ற வெம்மையான ரக்த ப்ரவாஹத்தினுல் கலக்கப்பெற்று |
| ாழி வன் புயத்து இகல் வயவர் பட்டு அற | பெருமை தங்கிய வலிய தோள்களையுடைய போர்வீரர்களும் இறந்தொழிய | வேலைகள் ஏழும் ஒன்று ஆகி நின்று இரைப்ப காண்டி. | ஏழு கடல்களும் ஒன்று கூடிக் கோஷிக்கும்படியைக் காண்பாய், |

பரதனது சதுரங்க சேனைகளை நான் வெட்டி வீழ்ப்பேன்; அதனுல் இரத்தக் கடல் தோன்றி ஏழு கடலையும் ஒன்ருக்கிப் பேராரவாரஞ் சய்வதை இவன் காணப்போகின்ருன் ன்ருனுயிற்று. இதனுல் தனது கோபாவேசத்தின் மிகுதி காட்டப்பட்டது.

(சீற்றங்கொண்ட லக்ஷ்மணனுக்கு இராமன் சமாதானங் கூறுதல்.)

251. சேனுயர் தருமத்தின் தேவைச் செம்மையின்
ஆணியை யன்னது நினைக்க லாகுமோ?
பூணியன் மொய்ம்பினுய் போந்த தீண்டெனைக்
காணிய நீயிது பின்னுங் காண்டியால்,

| | | | |
|---|---|---|---|
| ண் இயல் மொய்ம்பினுய் | அணிகலமாகப் பொருந்திய வலிமையையுடைய இளையோனே! | அன்னது நினைக்கல் ஆகுமோ | நீ குறித்த அவ்விதமாக நினைத்தல் தகுதியோ? |
| சண் உயர் தருமத்தின் தேவை | மிகச் சிறந்த தர்ம தேவதையானவனும் | ஈண்டு போந்தது எனை காணிய | பரதன் இங்கு வந்தது என்னைக் காணும் பொருட்டாமத்தனை; |
| செம்மையின் ஆணியை | ஆர்ஜவ குணத்தை நிலை நிறுத்தும் அச்சாணி போன்றவனுமாகிய பரதனைப்பற்றி | இது நீ பின்னும் காண்டி | இதனை நீ அடுத்தபடியாகக் கட் கூடாகக் காண்பாய். |

தருமமே வடிவெடுத்தவ னென்னலாம் படியான பரதாழ்வான் தருமத்திற்கு மாருக நம்மீது படையெடுத்து வரமாட்டான்; ஆர்த்தியினுல் நம்மைக் காணக் கருதியே இங்கு வருகின்ருனென்பதை நீயே தெரிந்துகொள்ளப் போகிருயென்றவாறு.

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



(இராமபிரான் பரதனாழ்வானது வடிவத்தை முடிய நோக்குதல்.)

252. தொழுதுயர் கையினன் துவண்ட மேனியன்
அழுதழி கண்ணினன் அவல மீதென
எழுதிய படிவமொத்து எய்துவான் தனை
முழுதுணர் சிந்தையான் முடிய நோக்கினன்.

| | | | |
|---|---|---|---|
| தொழுது உயர் கையினன் | அஞ்சலித்து உயர வெடுத்த கைகளை யுடையவனும் | அவலம் ஈது என எழுதிய படிவம் ஒத்து எய்துவான் தனை | துன்பத்தின் வடிவம் இ... தானென்று எழு... காட்டின உருவ... போன்று வருபவ... மான பரதனை |
| துவண்ட மேனியன் | தளர்ந்த உடலையுடையவனும் | | |
| அழுது அழி கண்ணினன் | அழுதலால் அழகழிந்த கண்களை யுடையவனும் | முழுது உணர் சிந்தையான் முடிய நோக்கினன் | ஸர்வஜ்ஞனான இராம... முழுவதும் நன்குகப் பார்த்தான். |

(பரதனை நோக்கி இராமன் தந்தையின் சேமம் வினவுதல்.)

253. புல்லினன் நின்றவன் புனைந்த வேடத்தைப்,
பன்முறை நோக்கினன் பலவு முன்னினன்
அல்லலி னழுங்கினை ஐய வாளுடை
மல்லுயர்தோளினன் வலியனோ வென்றான்.

| | | | |
|---|---|---|---|
| புல்லினன் நின்று | (இராமன் பரதனைத்) தழுவி | ஐய அல்லலின் அழுங்கினை | அப்பா! துன்பக் கடலி... மூழ்கியிருக்கின்றாயே! |
| அவன் புனைந்த வேடத்தை பல் முறை நோக்கினன் | அப்பரதன் தரித்திருந்த தவவேஷத்தைப் பல முறை உற்று நோக்கி | ஆள் உடை மல் உயர் தோளினன் | உலகத்தை யாள்பவரு... பலிஷ்டமான தோள்... களை யுடையவருமா... நம் சக்ரவர்த்தி |
| பலவும் உன்னினன் | பலபடியாகக் கருதினவனாய் | வலியனோ என்றான் | திடகாத்திரராக விரு... கின்றாரோ வென்... வினவினன். |

(சக்ரவர்த்தி துஞ்சினதைப் பரதன் கூறுதல்.)

254. அரியவனுரைசெயப் பரத னையநிற்,
பிரிவெனும் பிணியினா லென்னைப் பெற்றவக்
கரியவள் வரமெனுங் காலனால்தனக்,
குரியமெய்ந் நிறுவிப்போ யும்பரானென்றான்.

| | | | |
|---|---|---|---|
| அரியவன் | உணர்வதற்குஅரியவனான இராமபிரான். | என்னை பெற்றஅ கரியவள் வரம் எனும் காலனால் | என்னைப் பெற்ற அக் கை... கேசியின் வரமென்கி... யமனாலும் |
| உரை செய | —இவ்வாறு சொல்ல, | | |
| பரதன் | (அதற்கு விடை கூறப் புகுந்த) பரதன் | தனக்கு உரிய மெய் நிறுவி போய் உம்பரான் என்றான் | தனக்குரிய புகழுடம்பை இவ்வுலகில் நிலை நிறுத்... திச் சென்று சுவர்க்க லோகத்தை யடைய... லானா னென்றான். |
| ஐய நின் பிரிவு எனும் பிணியினால் | பிரானே! உன்னைப்பிரிந்ததாகிற நோயினாலும் | | |

(தந்தையின் மரணங்கேட்டு இராமன் தரையில் விழுதல்)

255. விண்ணிடை யடைந்தன னென்ற வெய்யசொல்
புண்ணிடை யயிலெனச் செவிபுகாமுனம்
கண்ணொடு மனஞ்சுழல் கறங்கு போலவாய்
மண்ணிடை விழுந்தனன் வரனிலும்பரான்,

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



(கருத்துரை) தந்தை பரலோகஞ் சேர்ந்தானென்று பரதன் சொன்ன கொடிய வார்த்தை புண்ணில் வேல் நுழைந்தாற்போல மிக்க வருத்தம் விளைத்துச் செவிப்பட்ட உடனே விண்ணுலகத்தினும் மேலுள்ள பரமபதத்திற்கு உரியவனான ராமன், கண்ணும்மன மும் சுழல்கிற காற்றுடிபோலச் சுழலப்பெற்றுத் தரையில் விழுந்தனன்.

(இராமன் புலம்புதல்)

256. நந்தா விளக்கனைய நாயகனே நானிலத்தோர்
தந்தாய் தனியறத்தின் தாயே தயாநிலையே
எந்தா யிகல்வேந்தரேறே இறந்தனையே
அந்தோவினி வாய்மைக் காருளரோ மெய்யுற்றார்?

(கருத்துரை) அவியாததொரு விளக்கை யொத்த தலைவனே! பூமியிலுள்ளார்க்குத் தந்தை போல்பவனே! அருளுக்கு இருப்பிடமே! என் தந்தையே! பகையரசர்களாகிய யானைகளுக்குச் சிங்கமே! நீ இறந்து போயினையே!; இனி ஸத்யத்துக்கு உண்மையாக உறவாகுபவர் உன்னைப்போல் வேறுயாவருளர்! ஐயோ! ... ....

(இதுவுமது)

257. தேனடைந்த சோலைத் திருநாடு கைவிட்டுக்
கானடைந்தே னென்னத் தரியாது காவலநீ
வானடைந்தா யின்னமிருந்தேனுன் வாழ்வுகந்தே
ஊனடைந்த தெவ்வருயிரடைந்த வொள்வேலோய்!

(கருத்துரை) உடற்கொழுப்பை யடைந்த பகைவர்களது உயிரைக் கவர்ந்த ஒளி மிக்க வேற்படையை யுடையவனே! தேன்மிக்க சோலைகள் சூழ்ந்த கோசலநாட்டை நீங்கி நான் வனம்புக்கேனென்றறிந்த மாத்திரத்தில் அரசனே! நீ யென்னைப் பிரிந்த துயரத்தைப் பொறுக்கமாட்டாமல் பரலோகஞ் சென்றாய். நீ அங்ஙனஞ் சென்றதை யறிந்த உடனே நான் இறந்துபடவேண்டி யிருக்கவும் இறவாமல் பிழைத்திருக்கின்றேனந்தோ!

(இரங்குமிராமனைத் தம்பிமார் தாங்க வசிட்டன் தேற்றுதல்)

258. என்றெடுத்துப் பற்பலவும் பன்னியிடருழக்குங்
குன்றெடுத்த போலுங் குவவுத் தோட்கோளரியை
வன்றடக்கைத் தம்பியரும் வந்தடைந்த மன்னவருஞ்
சென்றெடுத்துத் தாங்கினார் மாவசிட்டன் தேற்றினான்.

(கருத்துரை) கீழே தெரிவித்தவாறு குரலெடுத்து மிகப் பலவார்த்தைகளை விடாது கூறித் துன்பத்தில் மூழ்குகிற மால்வரைத்தோளனாய் வலிய சிங்கம் போன்றவனான ராமனை மஹாவீரர்களான தம்பிமார் மூவரும், அப்போது அங்கு வந்து சேர்ந்த அரசர்களும் அருகிற் சென்றுபோய் எடுத்து அணைத்தார்கள். மஹானான வஸிஷ்ட முனிவன் தேறுதல் கூறுமவனாயினன்.

(இராமன் சக்ரவர்த்திக்குத் தர்ப்பணஞ் செய்தல்)

259. புக்கனன் புனலிடை முழுகிப் போந்தனன்
தக்க நன்மறையவன் சடங்கு காட்டத்தான்
முக்கையி னீர்விதி முறையினீத்தனன்
ஒக்கநின் றுயிர்தொறு முணர்வு நல்குவான்.

(கருத்துரை) ஸகல ஜீவராசிகளிடத்தும் ஒரு தன்மையாக நின்று அவற்றிற்கு அறிவை யருளுந் திருமாலாகிய இராமன் நீரிலிறங்கி நீராடி வந்து, ஓதத்தக்க சிறந்த வேதங்களை யுணர்ந்த புரோஹிதனான வஸிஷ்ட பகவான் செய்யவேண்டுஞ் சடங்கையறிவிக்க, தான் கைகளால் மூன்றுவிசை எடுத்து விடப்படுகிற தர்ப்பண நீரை சாஸ்த்ரோக்தமான முறைப்படி இறந்த தன் தந்தையை யுத்தேசித்து விட்டனன்.

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



(பரதனது விரதவேடத்தைக் குறித்து இராமன் வினவுதல்)

260. வரதன் துஞ்சிலன் வையமாணையாற்
சரத நின்னதே மகுடந் தாங்கலாய்
விரதவேடநீ யென் சொல்வேண்டுவான்
பரத கூறெனுப் பரிந்து கூறினன்.

(கருத்து.) பரதனே! தான் சொன்னபடி வரம்தந்த சக்ரவர்த்தியோ முடிந்தனர் பின்பு நிலவுலகம் அவனது கட்டளையால் உண்மையாக உன்னதேயாம், அங்ஙனமிரு நீ முடிசூடாமல் தவவேடத்தை விரும்பிப் பூண்டது யாது காரணத்தாலோ? சொல் யென்று அன்புடன் வினவினன். ... ... ...

(இராமனுக்குப் பரதன் மறுமொழி கூறுதல்)

261. நோவதாகவிவ் வுலகை நோய்செய்த
பாவகாரியிற் பிறந்த பாவியேன்
சாவதோர்கிலேன் தவஞ்செய் வேனலேன்
யாவனுகி யிப்பழிநின் றேறுவேன்.

(கருத்து.) இந்நிலவுலகம் முழுதும் வருத்தமே யாம்படி வருத்தத்தை விளைவித்த பா யிடத்திற் பிறந்த பாவியேன் யான் இறக்கத் துணிந்திலேன். தவம் புரிதற்கும் ஏற்றவ லேன், இனி எத்தன்மைபனய் இப்பழிப்பினின்று நீங்கி ஈடேறுவேன். ....

(இராமனே அரசுபுரியுமாறு பரதன் வேண்டுதல்)

262. உந்தைதீமையு முலகுறுதநோய்
தந்ததீவினைத் தாய்செய் தீமையும்
எந்தை நீங்கமீண்டரசு செய்கெனச்
சிந்தையாவதுந் தெரியக் கூறினன்

(கருத்து.) எந்தாய்! உனது தந்தையான தசரதன் செய்த தீமையும், உலகுச் நேரத் தகாத துன்பத்தைச் செய்த பாவியான கைகேயி செய்த தீமையும் நீங்கும்படி அயோத்திக்குத் திரும்பி வந்து அரசாட்சி செய்வாயாக என்று தன் மனக்கருத்து முழுவ யும் இராமனுக்கு விளங்கச் சொன்னன் பரதன். .... ... ...

(இராமன் பரதனை நோக்கிக் கூறுதல்)

263. தாய்வரங்கொளத் தந்தையேவலால்
மேயநங்குலத் தரும மேவினேன்
நீவரங்கொளத் தவிர்தல் நீர்மையோ
ஆய்வரும்புலத் தறிவு மேவினய்.

(கருத்து.) "ஆய்வரும் புலத்தறிவு மேவினய்!" என்ற ஈற்றடி பரதனை நோக்கி விளி. ஆய்வு அரும் புலத்து அறிவு மேவினய்!— ஆராய்ந்து அறிதற்கரிய அறநூல் நூல் முதலியவற்றின் உணர்வையடைந்த பரதனே! என்றவாறு. உனது தாயானு கைகே வரம் பெற்றுக்கொள்ள அதற்குக் கட்டுப்பட்ட சக்ரவர்த்தியின் கட்டளையினல் நம குலத்துக்கேற்ற வொழுக்கத்தை ஏற்றுக் கொண்டேன்; உன்னுடைய வேண்டுதலுக்கா அவ்வற நெறியை நான் தவிர்தல் தருமமாகுமோ? ஆகாது........ ...

(அரசு என்னதாகில் நான் உனக்குத் தந்தேன்; ஆள்க என்று பரதன் வேண்டுதல்)

264. முன்னர்வந்துதித் துலகமூன்றினும்
நின்னையொப்பிலா நீபிறந்த பார்
என்னதாகில் யானின்று தந்தனென்
மன்னபோந்துநீ மகுடஞ் சூடென

265. மலங்கி வையகம் வருந்தி வைகநீ
உலங்கொள் தோளுனக் குறுவ செய்தியோ?
கலங்குருவணங் காத்தி போந்தெனப்
பொலங்குலாவுதாள் பூண்டு வேண்டினன்.

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



(கருத்து.) எனக்கு முன்னே வந்து பிறந்து மூவுலகங்களிலும் உன்னை யொப்பவரில்லாத நீ பிறந்த பூமியானது நீ சொன்னபடி என்னுடையதானால் நான் அதனை இப்பொழுது உனக்குத் தந்தேன். அரசனே! நீ மீண்டு வந்து முடிதரிப்பாயாக. என்று சொல்லி, நாயனே! இவ்வுலக முழுவதும் கலங்கி வருந்திநிற்க மஹாவீரனான உனது மனத்திற்கு இசைபவற்றைச் செய்வாயோ? செய்தல் தகுதியன்று. ஆதலால் உலகம் கலங்காதபடி மீண்டுவந்து பாதுகாப்பாய் என்றுஞ் சொல்லி இராமபிரானது அழகிய திருவடிகளைப் பிடித்துக்கொண்டு பிரார்த்தித்தான் பரதன்.

*266. எந்தையேவலான் டேழொடேழெனு, வந்தகாலநான் வனத்துள்வைகநீ*
*தந்தபாரகந் தன்னை மெய்ம்மையால் அந்தநாளெலா மாளென்னுணையாள்.*

(கருத்து.) எமது தந்தை நியமித்தபடி பதினான்கு வருஷகாலம், நான் காட்டில் வசிக்க, நீ தந்தையளித்த ராஜ்யத்தை அத்தந்தையின் உண்மை தவறாதபடி எனது கட்டளையால் அந்தப் பதினான்கு வருஷகாலம் அரசாள்வாய்.

(பரதன் இராமனிடம் திருவடி நிலையை வேண்டிப் பெறுதல்)

*267. விம்மினன் பரதனும் வேறு செய்வதொன் றின்மையி னரிதென வெண்ணியேங்குவான்*
*செம்மையின் திருவடித் தலந்தந்நிசென, எம்மையுந் தருவன விரண்டு நல்கினன்.*

(கருத்து) பிறகு பரதனும் வேறு செய்யக்கடவதொன்றுமில்லாமையால், இராமனைப் பிரிந்துசென்று அரசாளுதல் அரியதாமென்று நினைத்துக் கலங்கித் திகைத்தவனாய், பிரானே! உனது பாதுகையை அன்போடு கொடுத்தருள்வாயென்று இராமனைப் பிரார்த்திக்க அப்பெருமான், எல்லா வுலகவின்பங்களையுங் கொடுத்தருள்வன வான தனது இரண்டு திருவடி நிலைகளையும் தந்தருளினன்.

(திருவடி நிலையைச் சூடியவண்ணம் பரதன் தொழுது மீளுதல்)

*268. அடித்தல மிரண்டையு மழுதகண்ணினன்*
*முடித்தல மிவையென முறையிற் சூடினன்*
*படித்தலத் திறைஞ்சினன் பரதன் போயினன்*
*பொடித்தல மிலங்குறு பொலங்கொள் மேனியான்.*

(கருத்து) கண்ணீர் பெருக நிற்பவனும் நிலத்தின் புழுதிபடிந்து விளங்குகிற அழகிய திருமேனியை யுடையனுமாகிய பரதன் அந்தப் பாதுகை யிரண்டையும் 'நமக்குக் கிரீடங்கள் இவையே' என்று கொண்டு முறைப்படி சிரமேற் கொண்டவனாய்த் தரையில் விழுந்து வணங்கி மீண்டு சென்றனன் .... .... .... ....

(பரதன் அயோத்தி சேராது நந்திக் கிராமத்திலிருந்தல்)

*269. நந்தியம் பதியிடை நாதன்பாதுகஞ், செந்தனிக் கோன்முறைசெலுத்தச் சிந்தையான்*
*இந்தியங்களையவித் திருத்தன்மேயினன், அந்தியும்பகலு நீரழுத கண்ணினன்.*

(கருத்து) நந்திக்கிராம மென்னுமிடத்திலே இராமபிரானது திருவடிநிலை முறைப்படி செங்கோல் செலுத்தப் பரதன் இரவும் பகலும் அழுதுகொண்டே மனத்தினால் ஐம்பொறிகளையு மடக்கி அங்கே தங்கியிருந்தனன். .... .... ....

திருவடி சூட்டுபடலம் முற்றிற்று.

கம்பரின்பக்கவித்திரட்டில் அயோத்தியாகாண்டம் முற்றுப்பெற்றது.

மற்ற நான்கு காண்டங்கள் தனிப் புத்தகமாக வெளிவரும்.

ஸ்ரீ காஞ்சீ பிரதிவாதி பயங்கரம்

அண்ணங்கராசாரியர் தொகுத்த

**கம்பரின்பக் கவித்திரட்டில்**

முதற்பகுதி முற்றிற்று.

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



ஸ்ரீ காஞ்சீ பிரதிவாதி பயங்கரம்
அண்ணங்கராசாரியர்

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:   ஸ்ரீமத்வரவரமுநயே நம:

# ந்ருஸிம்ஹப்ரியா ப்ரத்யாக்யானம்.

### ஸ்ரீகாஞ்சீ. ப்ர. அண்ணங்கராசாரியரெழுதியது.

---

1. ஊர் பேரில்லாமலும் தேதியில்லாமலும் (துர்நிரீக்ஷாசிக்ஷா—1) என்கிற ஓர் நிந்தைக் கந்தை இன்று (10—6—61) நம்முடைய பார்வைக்கு வந்தது. இதை யெழுதியவர் யார்? இதிலுள்ள விஷயங்கள் யாவை? இத்யாதிகளைப் பற்றி அடுத்தபடியாகப் பேசுவோம். இதிலுள்ள மிக முக்கியமான விஷயத்திற்கு நாம் முன்னம் விடை தருவோம்.

"தான் கெட்டது மன்னியில் சந்திரபுஷ்கரிணியையும் கெடுத்தானும்" என்ற பழமொழி இவருக்காக ஏற்பட்டது தான். வதந்தியில் செவிப்பட்ட வானமாமலைச் செய்தியென்று ஒரு தலைப்பிட்டு அதில் இது கண்ட கனவையும் தான் அப்போது பிதற்றுவதாகவும் எழுதியிருக்கிறது. வானமாமலை மடத்தாரும் ஸ்ரீ அஹோபில மடத்தாரும் கலா வைஷம்யம் பாராட்டி வீண் சண்டைகளுக்கு செல்வதே எப்போதும் கிடையாது. இதன் வியாபாரம் வம்பு பேசுவதும் தூஷணம் செய்வதுமே யாதலால் மாயாஜாலங்களைச் செய்கிறது. ஸ்ரீவானமாமலைக்கு ஸ்ரீ அஹோபில மடம் ஜீயர் எழுந்தருளிய போது இது எழுதியிருப்பது போல் ஏதாவது நடந்ததாக ஸத்யமாக இதனுல் சொல்ல முடியுமா? செவிப்பட்ட என்கிறதே; யார் மூலம் என்பதை நிரூபிக்க முடியுமா? வேறு எந்த விதமான விசாரமும் வேண்டாம்; இது எழுதியிருக்கும் செய்தியை ப்ராமாணிகமாக நிரூபித்து விட்டால் போதும்."

என்று ப்ரக்ருத நிந்தைக் கந்தையில் (பக்கம் 2ல்) எழுதப்பட்டிருக்கிறது. "வேறு எந்த விசாரமும் வேண்டாம், இதை நிரூபித்து விட்டால் போதும்" என்றெழுதி யிருப்பதால் அதையே ஸப்ரமாணமாக நிரூபிக்கிறோம். தேவப்பெருமாள் திருத்தேரன்று வெளிவந்த ஸ்ரீராமாநுஜன் 149ல் **ந்ருஸிம்ஹப்ரியா நிரீக்ஷணம்** என்னும் வியாஸத்தில் நாமெழுதி வெளியிட்டிருப்பதை இங்கெடுத்துக் காட்டுகிறோம்.

"வானமாமலையிலுள்ள வித்வான்கள் நால்வர் அப்போதே நமக்கு ஸ்ரீமுகங்கள் அருளியிருக்கிறார்கள். அவர்களில் ஒருவரும் இது ஸ்வகபோல கல்பிதமென்று எழுதவில்லை. நாம் எழுதியிருந்த வகையில் ப்ரஸங்கம் நடந்ததுண்டு என்றும், இங்கே யிருக்கின்ற வித்வான்களில் யாராவது இதற்கு மறுப்புச் சொல்லுவதானுல் சொல்லலாம் என்று அந்த ஜீயர் சொன்னதாகத் தெரியவில்லை யென்றும், லௌகிக விரோதமாக அவர் ப்ரஸங்கித்ததுண்டு; உடனே நாங்கள் சிலர் ஏகாந்தத்திற் சென்று 'இப்படி யெல்லாம் அஸதஸ்யமாகப் பேசுவது தகுதியன்று' என்றுணர்த்தினேம் என்றும் தமிழிலும் ஸம்ஸ்க்ருதத்திலும் நமக்கு எழுதியிருக்கிறார்கள். அந்த ஸ்ரீமுகங்கள் அவசியமானபோது அச்சாகி வெளிரும்"

என்று நாம் எழுதி ப்ரசுரம் செய்தே யிருக்கிறோம். வானமாமலை வித்வான்கள் விடுத்த அந்த ஸ்ரீமுகங்கள் அவசியமானபோது அச்சாகி வெளிவருமென்று நாம் தெரிவித்திருந்தபடியே இப்போது அவசியம் ஏற்பட்டதனுல் இதோ அச்சாகி வெளிவருகிறது.

2. தமிழில் வந்த ஸ்ரீமுகங்கள் நிற்க; மிகச் சிறந்த வித்வான் எழுதின ஸம்ஸ்க்ருத ஸ்ரீமுகத்தை இதன் கீழ் வெளியிடுகிறோம். வானமாமலையில் ஸ்ரீராமாநுஜ ஸம்ஸ்க்ருத வித்யாசாலா என்றொரு ஸம்ஸ்க்ருத வித்யாலயம் நெடுநாளாக வுள்ளது. அதில் தலைமைப் பண்டிதராயும், மடத்திலும் ஆஸ்தான வித்வானுயும் விளங்குபவர் ஸ்ரீமதுபய வே. A. கோபாலய்யங்கார் ஸ்வாமி யென்பவர். இந்த ஸ்வாமி நமக்கு நெடுநாளாக வஹி ப்ராண ஜவாவர:. நம்முடைய ஸம்ஸ்க்ருத பத்ரிகைகளையும் தமிழ்ப்பத்ரிகைகளையும்

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



மற்றும் அனேக க்ரந்தங்களையும் காலே காலே கடாக்ஷித்தருளி ஆர்வம் பொங்கி அனேக ஸ்ரீமுகங்கள் அநுக்ரஹித்து வருபவர். இந்த ஸ்வாமியின் ஸ்ரீமுகம் ஒன்று போருமென்று அதுமட்டுமே வெளியிடலாகிறது ;—

வானமாமலை மடம் ஆஸ்தான வித்வான் ஸ்ரீ உவே. A. கோபாலய்யங்கார் ஸ்வாமியின் ஸ்ரீமுகம்.

[illegible] 27—4—61

[illegible]

[illegible] "வதந்தியில் செவிப்பட்ட வானமாமலைச் செய்தி" [illegible] ... ... [illegible] 147 [illegible] ... [illegible] ... ...

இந்த வடமொழிக் கடிதத்தில் என்ன எழுதப்பட்டிருக்கிறதோ அதைத் தான் ஸ்ரீராமாநுஜன் 149ல் எழுதினோம்; அதையே இதிலும் அநுவதித்தோம். வானமாமலையில் இந்த ஜீயர் செய்த ப்ரஸங்கத்தில் "[illegible]" [லோகாபிராமமான விஷயங்களோடு நில்லாமல் சில அஸந்தர்ப்ப விஷயங்களையும் ப்ரஸ்தாவிக்கவே ப்ரஸ்தாவித்தார்] என்றெழுதி விட்டு உடனே எழுதியிருப்பதைப் பாரீர்.

"[illegible]"

என்றெழுதியுள்ளார் வானமாமலை வித்வான். இதன் பொருளை நாம் விவரிக்க வேண்டியது

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



...ல்லை. "அஸதஸ்யமான விஷயத்தை அவர் சொன்னதற்காக அந்த க்ஷணத்திலேயே அந்த ...யிலேயே நாங்கள் எதிரிட்டு பூசல் விளைவிக்க வேண்டியது அவசியமென்று சிலர் ...ணக்கக் கூடுமானாலும் தாக்ஷிண்ய பரவஶர்களான நாங்கள் அந்த வழிக்குச் செல்லவில்லை ...ன்பது தவிர வேறொன்றும் பொருளன்று. வேறு பொருளுண்டாகில் சொல்லிக் காண ...ாம். "ஹு ... என்று அப்ரஸக்தமாக வொரு வித் ...ான் எழுதுவரா? அங்கேயே புடைத்திருக்க வேண்டுமென்றும் ஆனாலும் தாக்ஷிண்யத் ...ாலே அது செய்திலோமென்றும் வெகு சாதுர்யமாகத் தெரிவித்தாராகிறார். இந்த வாக் ...த்தின் பொருள் எப்படியாவதிருக்கட்டும். ஜீயர் ஸபையில் அஸதஸ்யமாகப் பேசினாரென்ப ...ம். * ... * என்கிற கணக்கிலே ஶிக்ஷித்தோமென்றும் ...பஷ்டமாகக் காட்டியிருக்கிறார். * विललाप सभामध्ये जगर्हे च पुरोहितम् * என்கிற ஸ்ரீராமா ...ண ச்லோகத்தை வியாக்கியானித்தருளாநின்ற நம்பிள்ளை "[ஸபாமத்யே புரோஹிதம் ...கர்ஹே] * நியமாதிக்ரமம் ரஹஸி போதயேத் * என்கிற நிலையும் பார்த்திலன்" என்று ...ரிடத்திலும், "... என்ற நிலையைக் குலைத்தான். புரோஹிதத்வமாகிற தொழில் கழிகை ...னாலே" என்று மற்றோரிடத்திலும் அருளியுள்ளார் ஸ்ரீபரதாழ்வானைப் போலே தங்க ...ால் நடந்துகொள்ள முடியவில்லை யென்கிற நிர்வேதத்தை அந்த ஸ்ரீமுகம் நன்கு காட்டி ...ள்ள தென்பதை மிதமதிகளும் அறிவர்கள்.

3. "வேறு எந்த விசாரமும் வேண்டாம்: வானமாமலைச் செய்தியை ப்ராமாணிக ...ாக நிரூபித்து விட்டால் போதும்" என்று இவர் எழுதியபடி நிரூபித்தாயிற்று. இனி ...வர் செய்யவேண்டிய தென்ன? "வெட்கங்கெட்ட பிழைப்புதானே என்னுடையது" ...ன்று பெருந் தெருவே பறைசாற்றி யுலாவ வேண்டுமத்தனை.

4. முக்கியமான விஷயத்தை முதலித்தாயிற்று. இனி இந்த நிந்தைக் கந்தையை ...தியோடந்தமாக ஆராய்வோம். இந்தக் கந்தையை யெழுதியவர் ஒரு துறவி யென்பதைத் ...ாமே ஸ்பஷ்டமாக் காட்டிக் கொள்ளுகிறார். முன்னாச்ரமப் பெயரையும் இவ்வாச்ரமப் ...பெயரையும் வெட்ட வெளிச்சமாகக் காட்டிக் கொண்டிருக்கிறார். அப்படியிருந்தும், கையெ ...த்திடாமலும் தேதி யில்லாமலும் அச்சுக்கூடத்தின் பெயரை மறைத்தும் பாமரக்ருத்ய ...ாக வெளியிடுவது எதற்காக? ஆசைதீர வையவேணு மென்பதற்காகத் தானே. தாராள ...ாக எவ்வளவும் வையட்டும். நாம் பல பல விஷயங்களை யெடுத்து, ஸ்ரீமதேராமாநுஜாய ...மஹா பேர்வழிகளின் ஞானச் சாயங்களை அலசியலசி யிருக்கிறோம். அவற்றில் ஒன்றி ...ண்டுக்காவது ஶாஸ்த்ரீயமான ஸமாதான மெழுதிவிட்டு இவர்கள் நம்மை எவ்வளவு ...ஷித்தாலும் பொருந்தும். ந்ருஸிம்ஹப்ரியா பண்டிதர்களின் அஜ்ஞான அந்யதாஜ்ஞானங் ...ளை நாம் அபரிமிதமாக எடுத்துக்காட்டி * பேர்க்கவும் பேராவே * என்னும்படி விளக்கி ...ருக்கிறோம். அவை பேர்க்கவும் பேராதவையே யென்பதை ஸ்ரீமத் கோமல் ஸ்வாமி ...தலானார் [அஹோபிலமடத்தைச் சேர்ந்தவர்களே] சிலாசாஸனமிட்டு நாட்டியிருக்கிறார் ...ள். இந்த ஸ்வாமி 22—5—61ல் அநுக்ரஹித்த ஸ்ரீமுகத்திலுள்ள வாசகத்தை (ஸ்ரீரா. ...49. ந்ருஸிம்ஹப்ரியா நிரீக்ஷணத்தில் பக்கம் 4ல்) வெளியிட்டிருக்கிறோம். மீண்டு இங்கும் ...வளியிடுகிறோம்.

"அம்ருதலஹரி அம்ருதலஹரியே யாதலால் அந்த அபர்யாப்தாம்ருதத்தை எவ்வளவு பருகியும் த்ருப்தியே பிறக்கவில்லை. குழாங்களுமநுபவித்தது ... ... விஷயங்களை அலசி யலசி அபூர்வ விஷயங்களை ஸாதிப்பது (... ...) என்ற முறைப்படி தேவரீருக்கே அஸாதாரணம்,"

...ன்கிற வாசகங்கள் நிஷ்பக்ஷபாத வித்வத் வரிஷ்டரான கோமல் ஸ்வாமியின் திருக்கையி ...ருந்து அவதரித்தவை.

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

5. இந்த நிந்தைக் கந்தை யெழுதுவதைப் பாருங்கள்—

"தமக்கு ஸர்ட்டிபிகேட் கொடுத்தவர்களது லிஸ்டில் வீண் ஆக்ரஹிகளான சில தெ கலையார்களையும் பரமபதித்துள்ள சில மஹான்களையும் சேர்த்து தற்பெருமையைத் தம்பட் மடித்துக் கொள்ளுகிறது"— என்று.

பாமரர்களையும் வஞ்சிக்கமாட்டாத வார்த்தையன்றோ இது. திருவயிந்திரபுரம் சேட்லூ நரஸிம்ஹாசாரியர், திருச்சி, ஏ. வி. கோபாலாசாரியர், ராயம்பேட்டை R. V. கிருஷ்ண சாரியர் ஆகிய இம்மூவரும் நம்மோடு போராடி, க்ஷாமண பத்ரிகையோடு விச்ராந்தர்களா செய்தியை அவர்கள் ஜீவித்திருந்த காலத்தில் பிரசுரப்படுத்தினோமே யல்லது அவர்கள் பதித்த பிறகு அவர்களுடைய ஸர்ட்டிபிகேட்டை நாம் ப்ரஸ்தாவிக்கவேண்டிய அவசிய யில்லை. ஸ்ரீமத் கபிஸ்தலம் ஸ்வாமி. லக்ஷ்மீபுரம் ஸ்வாமி போல்வார் பரமபதித்தவர்க யானாலும் அவர்கள் நம்மோடு போராட வந்தவர்களல்லர்; நம்முடைய நூல்கள் ப்ராமா கமான வழியிலேயே செல்லுமவை என்பதை நிலைநாட்டி யருளின மஹான்கள் அவர்க அவர்கள் தென்கலையார்களுமல்லர், ஆக்ரஹிகளுமல்லர். பாபபீருக்களும் ப்ராமாணிகர் மானவர்கள். அப்படிப்பட்ட மஹான்களில் ஒருவருடைய ஸர்டிபிகேட்டையாவது எதி தலையில் ஒருவராவது பெற்றிருப்பதுண்டோ? நமக்கு முதன்முதலாக ஸர்ட்டிபிகே அளித்தவர் ஸ்ரீ. உ. வே. ஸர். எஸ். வரதாசார்ய ஸ்வாமியும், V. V. ஸ்ரீநிவாஸய்யங் ஸ்வாமியும். இவர்களில் வி. வி. ஸ்வாமி பரமபதித்து விட்டாலும் S. V. ஸ்வாமி உல தின் பெரும் பாக்கியத்தினால் பாங்காக எழுந்தருளி யிருக்கிறபடி. இந்த ஸ்வாமி ஆக்ரஹி மல்லர், தென்கலையுமல்லர்.

6. ஸ்ரீமத் பரமஹம்ஸ. தென்பரையாண்டவன் ஸ்வாமி யொருவருடைய ஸர்ட்டி கேட் போதுமே. அந்த ஸ்வாமியினுடைய அத்புத பங்க்திகளை எடுத்தெடுத்து வாசிக் மிவர்கள் "வாய்ந்த மதுகைடவரும் வயிறுருகி மாண்டார்" என்ற திருமழிசைப்பிரா ஸ்ரீஸூக்திக் கட்டளையிலே வயிறுருகி மாளவேண்டியது தவிர வேறுண்டோ? தென்பர யாண்டவன் ஸ்வாமிக்கு இடையிடையே அத்யாஹிதம் நேருவதாக இருந்தும் நம்முடை பாக்யவசமாகவே திருமேனி பாங்காயெழுந்தருளி யிருக்கிறபடி. அந்த ஸ்வாமி ஸன்னி யிற் சென்று இவர்கள் ஒன்று கேட்கவேணும்—

"அண்ணங்கராசாரியருடைய க்ரந்தங்களின் பெருமையைப் பற்றி ஸ்வாமி எல்லை கடந் எழுதியிருக்கிறதே! அவர் தமக்கு ஸர்ட்டிபிகேட் தரவேணுமென்று ஸ்வாமி ஸன்னிதி அபேக்ஷித்ததுண்டா? அல்லது ஸ்வாமியாகவே திருவுள்ளம் பொங்கி யெழுதியருளினதா? என்று.

அந்த ஸ்வாமி ஸன்னிதியில் இப்படி சிலர் பண்டே கேட்டது முண்டு; அதற்கு அந்த ஸ்வா ஸாதித்ததையும் உடனிருந்தவர்கள் நமக்கு எழுதியுள்ளார்கள்; (அதாவது)

"நான் எல்லை கடந்து என்ன எழுதிவிட்டேன்? அண்ணங்கராசாரியருடைய திவ்யஸூ திகளின் பெருமைகளைப் பற்றி ஒருவன் ஆத்ம வஞ்சனை யில்லாமல் எழுதுவதானால் ஶதகமு எழுதினாலும் போதாதன்றோ. சில அஸூயா பிண்டங்கள் தூஷிப்பதனால் நமக்கென்ன குண க்ராஹிகளான நாம் யுக்ததரமாகவே யெழுதினோம்" என்று.

இதற்கு அந்த ஆஸ்தானத்திலிருந்து நேராக ஸ்ரீமுகமில்லாமையாலே இது கல்பித வார்த்தை யென்றாலும் குறையில்லை. அந்த ஸ்வாமியின் ஸாக்ஷாத் ஸ்ரீஸூக்திகள்—

"[illegible]
[illegible]

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



[illegible]" இத்யாதிகள்.

இந்த ஸம்ஸ்க்ருத வாக்யங்களினல் தெரிவிக்கப் படுவது என்ன? நம்முடைய க்ரந்தங்களெல்லாம் ஶாஸ்த்ர ப்ரமாண உபபத்திகள் மலிந்தவை யென்றும், எத்தனை தடவை வாசித்தாலும் ஆராவமுதமாய் விளங்குகின்றன வென்றும், ஸகல ரஸிக பண்டிதர்களின் உள்ளத்தைக் கொள்ளை கொள்ளுகின்றன வென்றும், இப்படியே யாவஜ் ஜீவம் அனேக க்ரந்தங்கள் அவதரித்துக் கொண்டிருக்க வேணுமென்றும், அதற்குரிய தேஹபாடவமும் தனதாந்ய ஸம்ருத்தியும் குறையற்றிருக்க வேணுமென்றும் ஸ்வாத்மானந்தமும் மங்களாசாஸனமும் தெரிவிக்கப் படுகிறது. பிராமாணிகர்கள் இப்படி ஆஶாஸியா நிற்க, இந்த நிந்தைக் கந்தை "இப்படியும் ஒரு ப்ரக்ருதி சிரகாலம் ஜீவித்து வருகின்றதே!" என்று வயிறெரிந்து எழுதுகின்றது. மஹான்களின் மங்களாஶாஸந வாக்குக்கள் பலிக்குமே யொழிய வயஜீவிகளின் வசை மொழிகள் ஒருகாலும் பலிக்கமாட்டா.

7. அஹோபிலமடாஸ்தானத்தை ந்யாய்யமான மார்க்கத்தில் அலங்கரித்திருந்த ஸ்ரீமத் பரமஹம்ஸ ஸ்ரீவண் சடகோப யதீந்த்ரருடைய நியமனத்தினல் இஞ்சிமேட்டழகிய சிங்கர் அநுக்ரஹித்த அபிநந்தன மங்களாசாஸன ஸ்ரீமுகம் பலவாண்டுகட்கு முன்பு நமது வேதாந்த தேசிக க்ரந்தமாலையில் அச்சாகி உலகமெல்லாம் பரவியுள்ளது (அதாவது)—

"[illegible] ॥" என்று.

உலகம் போற்ற நின்ற மஹான்கள் இப்படி அபிநந்தநமும் ஆஶாஸநமும் செய்யா நிற்க, சில அநாமதேயப் பேர்வழிகளும் அஸூயா பிண்டங்களும் பொருமைக்குப் போக்குவீடாக எத்தனை யெழுதினலும் உண்மையாக வுள்ள கீர்த்திகள் பெருகுமே யொழிய வேறொன்றும் நிகழாது. இஞ்சிமேட்டழகிய சிங்கர் ஒரு அவதார புருஷர். அந்த ஸ்வாமி நம்மை பண்டித ப்ரகாண்ட ஶப்தத்தாலும் விபஶ்சிதபஶ்சிம ஶப்தத்தாலும் வ்யபதேஶித்து "அண்ணங்கராசாரியருடைய வெளியீடுகளுக்கு ஆஸ்திகாக்ரேஸரர்கள் போஷகர்களாக வேணுமென்றும், இவை மேன்மேலும் வளர்ந்து செல்லவேணு மென்றும் அக்ருத்ரிமமாக ஆஶாஸித்தருளின தன் பலனுக நம்முடைய ஜகதுபகாரக க்ருத்ய விஶேஷங்கள் குறையொன்று மின்றிக்கே அபிவிருத்தி பெற்று வருகின்றன. * पूर्वं प्रधूमितो ... हृदयेऽग्निरिवोत्थितः * என்ற கணக்கிலே இந்தப் பண்டாரத்தின் ஹ்ருதயத்திலே தீப்பற்றி யெரிந்தால் யாருக்கு என்ன நஷ்டம்!

நமக்கு அஹோபில மடத்தில் நெடுநாளாக த்வேஷமென்று இவர்கள் பறைசாற்றுவதனுலும் ஒரு நஷ்டமுமில்லை. நம்முடைய அறுபத்து நான்காவது ஆண்டுநிறைவுக்கு ஞாபக சின்னமாக நாம் வெளியிட்ட (64 லக்கங் கொண்ட) நூல்களில் "அறுபத்துநான்கு

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



**நல்வார்த்தைகள்** " என்பது 23 பக்கங் கொண்டதொரு நூல். இதில் பக்கம் 7ல் 25-ஆம் வார்த்தை இது—

"பண்டைக்காலத்தில் வைதிக வித்யைகளுக்கு மகாராஜாக்களின் ஆதரவு அதிகமாயிருந்தது : அதனுலேயே முன்பு அந்த வித்யை தழைத்தோங்கி வந்தது ; இக்காலத்தில் இதை ஆதரிப்பாரில்லை. ஸ்ரீமத் பரமஹம்ஸேத்யாதி (மைஸூர்) ஸ்ரீபரகால ஸ்வாமி ஸ்ரீமத் அஹோபில மடாதிபதிகளான அழகியசிங்கர் ஸ்வாமி போல்வார் வைதிக வித்யையின் பெருமையை யுணர்ந்தவர்களாகையால் ஸ்ரீபாஷ்யாதி காலக்ஷேபங்கள் செய்யும் வித்யார்த்திகளுக்கு போஜனமளித்தும் விசேஷ ஸம்பாவனை யளித்தும் ஆதரித்து..." என்பது.

அப்போது இந்த பண்டாரத்தின் சில்விஷமங்கள் அதிகமாயிருந்துங் கூட நாம் நம்முடைய இயற்கையான குணபக்ஷபாதத்தாலே கௌரவமளிக்க வேண்டுமிடங்களுக்கு அதை யளித்தே திருவோம். வடகலை ஸம்பிரதாயத்திலுள்ள புராதனர்களும் நவீனர்களுமான பல வித்வான்களுடையவும் மடாதிபதிகளுடையவும் திருவுருவப் படங்களை சேகரித்து ப்ளாக்கெடுத்து வைதிக லௌகிக மஹநிய மண்டலியென்னும் பெயரால் பெரிய புத்தகமாக வெளியிட்டிருப்பது நாமே யொழிய வேறு யாருமில்லை. அப்புத்தகம் இரண்டாயிரம் பிரதி அச்சிடப்பட்டு உலகமெல்லாம் பரவியுள்ளது. அதை அதிமாநுஷ க்ருத்யமென்றே பலரும் கொண்டாடி வருகிறார்கள். இந்தப் பண்டாரம் அதில் தன்னுடைய ப்ரதிக்ருதி வரவில்லையே யென்கிற வயிற்றெரிச்சலினுல் ஏதேதோ செய்து வருகிறது, எது செய்தாலும் நம்முடைய யமஸ்ஸுக்கு விஜயத்வஜமே யாகுமது, ஸ்வாமி தேசிகன் "நிமீலயது லோசநே ந ஹி திரஸ்க்ருதோ பாஸ்கர:" என்கிறார். அந்த ஸ்ரீஸூக்தி இந்தப் பண்டாரத்திற்கே தகும்.

8. இப்போது மடம் வெளியிட்டிருக்கிற நிந்தைக் கந்தை பெரியவுருவத்தில் இரண்டு பக்கம் கொண்டிருக்கிறது. இதில் குறைந்த பக்ஷம் நம்முடைய பத்து பூர்வ பக்ஷங்களுக்காவது ஸமாதான மெழுத முன் வரலாம். அந்த பாவத்திலேயே போகவில்லை யிது. "அஞ்ஜலி யொழியத் தஞ்ச மொன்றில்லை" என்றொரு வசனமுண்டு. அது நம்முடைய க்ரந்தங்கள் விஷயத்தில் தான் ஏற்குமென்பதை இந்த மடம் ஆதியிலிருந்தே தெரிந்துகொண்டிருக்கிறது. அதனுல் ஸமாதான முரைக்கும் பணியில் தலையிடாதிருப்பது க்ஷேமமே. ஶாஸ்த்ரீய விஷயங்களை விட்டு வீண் வம்பு விஷயங்களை யெழுதினுலும் அதிலாவது ஆர்ஜவமுண்டோ வென்னில், அக்கேடுமில்லை. இது எழுதியுள்ள வம்பு விஷயங்களை வரிசையாக வெடுத்து நிரஸிக்கிறோமிங்கு.

"சென்னையிலுள்ள செட்டியார்களுடைய சாரிடிகளிலிருந்து வரும் பணத்தைக் கொண்டு இம்மாதிரி ஸம்ப்ரதாய ப்ரவசனம்"

இத்யாதிகள் எழுதுகிறது. இதற்குத் தத்துவமுணர்த்துகிறோம். சென்னையில் பல சாரிடிகளுண்டு ; அவற்றில் ஸ்ரீராமாநுஜன் போன்ற மாதப் பத்ரிகைகளுக்குப் பணம் கொடுப்பதான சாகை கிடையாது. கோயம்புத்தூரில் வாழ்ந்த தர்மவிலாஸத் தலைவரான [ஸுப்ரஸித்த மஹாதனிகரான] வெங்கடரமணையங்கார் லோகோபகாரகங்களான நம்முடைய வெளியீடுகளுக்கு மிகவுகந்து, இத் திருப்பணி நீடூழி நடந்து வரவேணு மென்று ஆஶாஸித்துப் பதினுயிரம் ரூபாய் பரிசளித்தது ஜகத்ப்ரஸித்தம். அவர் வடகலையே. ஆனுலென்ன ? அவர் குண பக்ஷபாதி இப்போது மடத்திற்கும் அபிமானியான உவே. மங்கலம் ராமாநுஜாசாரியர் ஸ்வாமிகளும் நம்முடைய வெளியீடுகளுக்கு யதாசக்தி பொருளுதவி புரிந்து வருபவர். மடத்தின் மிரட்டலுக்கு அஞ்சி இந்த மஹான் பொய் சொல்லார். "இதற்காக நான் கொடுக்கவில்லை ; வேறொன்றுக்காகக் கொடுக்கிறேன்" என்று சொல்லிவிடும் என்று அவருக்கொழுதி புத்தி பேதம் செய்யப் பார்க்குமிது. பரம ப்ராமாணிகரான அவரிடத்தில்

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



எந்தப் பப்பும் வேகாது. இங்கு முக்கியமான வார்த்தை. நமக்குப் பணம் எங்கிருந்து யாரிடமிருந்து கிடைத்தாலென்ன? பத்து மடாதிபதிகள் சேர்ந்தும் செய்யமுடியாத காரியங்களை நாம் அவலிலையாகச் செய்து வருகிறோ மென்று கீர்த்திமூர்த்தியான. இளங்காடு ஜீயர் [ரங்கூன் ஸ்வாமி] பொறித்து வைத்திருக்கிறார். ஸபைகளிலும் முழங்கியிருக்கிறார்.

9. மறைந்து போன அவர் நிற்க. நம் கண் முன்னே உலாவிக் கொண்டிருக்கிற D. R ஐயங்கார் "ஸ்ரீவைஷ்ணவத்திற்காக அண்ணாஸ்வாமி செய்திருக்கும் செய்துகொண்டிருக்கும் பணி கணக்கிட முடியாது" என்றெழுதிவிட்டு, உடனே என்ன எழுதியிருக்கிறார் தெரியுமோ? "நம் தேசமெங்கும் ஆயிரக்கணக்கிலுள்ள ஸ்ரீவைஷ்ணவர்கள் அண்ணாஸ்வாமிக்கு மேன்மேலும் வணங்கிக் கொண்டும் நன்றி செலுத்திக் கொண்டுமிருக்கின்றனர்' என்றன்றோ எழுதியிருக்கிறார். வணங்குகின்ற ஆயிரக் கணக்கான ஸ்ரீவைஷ்ணவர்கள் நன்றி செலுத்தும் வகை யாது கொல்! தேசிகன் ஸங்கல்பஸூர்யோதயத்திலே * ஶிக்ஷந்தி ஶிஷ்யஜந லக்ஷண லக்ஷிதேந ஶாஸ்த்ரேண தத்த்வமயி ஸுஷ்டுதேதி। த்ருஷ்டாவஸம்த்ருஹண ஸம்ஹிதி ஸம்வாணா: ஸம் ந்ராஸிநோபி உபயதே உஹதீம் யநாயா॥ * என்கிற ச்லோகத்தை இவர்களுக்காக இட்டருளி, நமக்காக [என்னொருவனுக்காகவே] * யஸ்மிந் யஸ்மிந் திஶி விஹரதே தேவி! த்ருஷ்டிஸ்த்வதீயா தஸ்யாம் தஸ்யாமஹமஹமிகாம் தந்வதே ஸம்பதோகா: * என்கிற ஸ்லோக ரத்நத்தை இட்டருளினார். நிற்க. அஸமஞ்ஜஸமாக வெழுதி அகப்பட்டுக் கொண்டு திண்டாடுகிற ந்ருஸிம்ஹப்ரியா பரிவாரங்கள் வீண் வசை மொழிகளை விட்டுத் தொலைத்து ஶாஸ்த்ரீயமான வழியில் பதில் எழுதினால் பதினாயிரம் ரூபாய் பரிசளிப்போமென்று பிரசுரம் செய்திருக்கிறோமே! அந்தப் பரிசைப் பெற முன்வருவார் ஒருவருமில்லையே. "அண்ணங்கராசாரியருடைய நூல்களைக் கண்ணெடுத்துப் பாராதீர்கள்; நமது ப்ரியாவையே பாருங்கள்" என்று மடம் எழுதுவதனால் என்னாகும்?

10. திருமங்கையாழ்வார் சிறிய திருமடலில் தம் திருவுள்ளத்தைத் தூதுவிடும்போது 'போராதொழியாதே போந்திடு நீ யென்றேற்குக், காரார் கடல்வண்ணன் பின் போன நெஞ்சமும், வாராதே யென்னை மறந்தது தான்" என்றருளிச் செய்தார். நெஞ்சே! நீ அங்கேயே நின்றுவிடாமல் உடனே வந்துசேர் என்று தாம் சொல்லியிருந்தும் நெஞ்சு அங்கேயே நின்று விட்டதாக மூலமுள்ளது. இங்கே பெரியவாச்சான் பிள்ளை வியாக்கியான ஸ்ரீஸூக்திகள் காண்மின் :—

[“போராதொழியாதே போந்திடு நீ யென்றேற்கு.] ஐயோ! நான்தானே கிடீர் என்னெஞ்சுதன்னை அங்கே தங்கப் பண்ணினேன். அதாவதென்னென்னில், பெருங்குடி புதுக்குடி மகனைப் பழைய பையலைப்போலே வரம்பிலும் வாய்க்காலிலும் சூடு பொகடாதேகொள் என்னும்; அதுவேயடியாக அவ்விடங்களாகாதே களவுக்கு ஸ்தானமன்று செய்யா நிற்கும். 'போராதொழியாதே போந்திடு நீ' என்றேன் நான்; அவ்விஷயத்தைக் கண்டால் போராதொழியவாகாதேயடுப்பதென்று அது அங்கே கால்தாழ்ந்து நின்றது." என்று.

இப் பங்க்திகளின் இன்சுவைப் பொருளையறிய இது பிறக்கவில்லை. ஆனாலும், நிஷேதிப்பது விதியிலே பர்யவஸிக்கு மென்று தெரிந்து கொள்ளுமிது. இதே போல, ஸ்ரீராமாநுஜனைப் பார்க்க வேண்டாம், பார்க்கவேண்டா மென்று இது நிஷேதிக்க நிஷேதிக்க "எல்லீருங் கண்டு அநுபவித்துக் களியுங்கள்" என்கிற விதிதான் தேறி நிற்கும். நம்முடைய ஸ்ரீராமாநுஜன் ஒருவர்க்குக் கிடைத்தால் அது குறைந்தபக்ஷம் ஐம்பது பேர்களின் கண்களுக்கு இலக்காகியே நிற்கின்றது அம்ருதலஹரியுமப்படியே.

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



11. இனி அடுத்த விஷயத்திற் செல்வோம்.

"மஹா ரஸிகராயும் ப்ராமாணிகாக்ரேஸரருமான D. R. ஸ்வாமியை வம்புக்கிழுத்து எழுதுகிறது. தனக்கு இஷ்டமானபோது D. R. போன்ற சுபாஶம்ஸிகள் என்கிறது."

என்றெழுதியுள்ளது மடம். D. R. ஐயங்காரை மஹாரஸிகரென்றும் ப்ராமாணிகாக்ரேஸரரென்றும் போற்ற உரிமையுடையோம் நாமேயன்றி இவர்களல்லர். மஹாரஸிகத்வமோ ப்ராமாணிகாக்ரேஸரத்வமோ அவர்க்குத்தான் தகும், அவரொருவர்க்கே ஏற்கும் என்பதை நாமே சபதமிட்டுரைப்போம். அவர் எழுதியவற்றில்,

"இவ்வளவு ஶக்தி வாய்ந்த மஹாபுருஷரான அண்ணுஸ்வாமியின் விஷயத்தில் அசூயையும் பொருமையையும் எத்திக்கிலிருந்தும் எதிர்பார்க்கலாம். ஆனால் எவ்வித வாதப்போரிலும் ஸ்வாமி பின் வாங்கவே மாட்டார். இவருடைய வாதமே கடைசியாக ஓங்கி நிற்கும்"

என்கிற வாசகங்கள் செப்பேடும் சிலாசாஸனமுமாக வன்றோ விளங்குகின்றன. D. R. இப்படியெழுதினது மஹாரஸிகத்வத்தினாலா? ப்ராமாணிகாக்ரேஸரத்வத்தினாலா? இரண்டினாலுமா? என்பதை மடமே நிர்ணயிக்கட்டுமே. அவரை நாம் வம்புக்கிழுப்பதாகச் சொல்வது மஹாஜாட்யம். நீதிமன்றங்களில் வக்கீல்கள் லா புத்தகங்களையும் லா ரிபோர்ட்டுகளையும் உதாஹரித்தால் வம்புக்கிழுப்பதாகப் பேதையனும் பேசான். "அசூயையையும் பொருமையையும் எத்திக்கிலிருந்தும் எதிர்பார்க்கலாம்" என்ற அவருடைய ஸ்ரீஸூக்தி அந்த க்ஷணத்திலிருந்து நாள் தப்பாமல் நாழிகை தவறாமல் அப்படியே பலித்து வருகிறதென்றால் அவரை மஹர்ஷியாக வன்றோ மதிக்கவேணும். தென்கலையில் பிறந்தவொரு மஹானும் இப்படியெழுத முன்வரவில்லையே. வால்மீகி பகவான் ஒவ்வொரு மஹார்த்தத்தை வெளியிட ஒவ்வொருவர் மேல் ஆவேசித்தாராம். "ராமோ விக்ரஹவாந் தர்ம:" என்பதை வெளியிட மாரீசன் பாலும், "தருணௌ ரூபஸம்பந்நௌ" இத்யாதியை வெளியிட சூர்ப்பணகை பக்கலிலும், "ப்ரக்க்யாத வீர்யஸ்ய ரஞ்ஜநீயஸ்ய விக்ரமை:" என்பதை வெளியிட ராவணன் மேலும் ஆவேசித்தது போல, "அண்ணுஸ்வாமி விஷயத்தில் அசூயையையும் பொருமையையும் எத்திக்கிலிருந்தும் எதிர் பார்க்கலாம்" என்னு மமுத மொழியை வெளியிட்டருளப் பேரருளாளனும் பேராசிரியர்களும் D. R. ஸ்வாமி பேரில் ஆவேசித்தபடியை என் சொல்லுவோம். உண்மையைத் தாமுணர்ந்தவளவோடன்றிக்கே உலகமறிய வெளியிட்டும் வைத்த இம்மஹாநுபவர்க்குக் கோவில் கட்டியன்றோ பூசனைபுரிய வேணும். சில தேவதைகள் தம்மையுபாஸித்தவர்களுக்குத் தலைகால் தெரியாமல் வரங்களைக் கொடுத்து விட்டுப் பிறகு அநுதபிப்பதுண்டு; அப்படியுமில்லை யிங்கு. இவரை உபாஸித்தாருமில்லை; அநுதபிப்பவருமல்லரிவர். "தனக்கு இஷ்டமான போது D. R. போன்ற சுபாஶம்ஸிகள் என்கிறது" என்று மடமெழுதி யிருப்பது மருள். 'இஷ்டமான போது, அநிஷ்டமான போது' என்று பிரிக்கப் போதிரண்டில்லையே, அநிஷ்டமான போது இன்னது எழுதி யிருக்கிறோமென்று காட்டட்டுமே. அநிஷ்டம் தலைகாட்டாதபடியன்றோ அந்த மஹான் நடந்து கொள்ளுகிறார். உலகில் இஷ்டாநிஷ்டதைகள் வ்யவஸ்திதங்களுமன்று. சுவ்ருவ வ்ருத்திகளே யிவை. ஆதிஶங்கராசாரியருடைய பலவுக்திகளை யெடுத்துப் புகழ்கிறோம். 'இஷ்டமான போது புகழ்வதோ?' என்று க்ஷேபிப்பாருளரோ?

12. இனி அடுத்த விஷயத்திற் செல்வோம்;

"இவரது சுவடிகளை இவர் ஊரிலில்லாத போது செல்வமணி ஜோதி வேஸ்டு பேபர் கடையில் போட்டு வருகிறானும்"

என்று இது வொரு பெரிய விஷயமாக எழுதப்படுகிறது. இதற்கும் தெரிவிக்கிறோம். ஒவ்வொருநாளும் எத்தனை திசையிலிருந்து எத்தனை பேபர்கள் எத்தனை பத்திரிகைகள் நமக்கு வந்து கொண்டிருக்கின்றன வென்பதை இவர் தாமே நம்மிடம் யாசகத்திற்கு வந்துகொண்

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



டிருந்த காலங்களில் கட்கூடாகக் கண்டிருப்பரே. ['யாசகத்திற்கு' என்றதை அடுத்தபடியாக விவரிப்போம்.] தினப்படியாக அப்படி வந்து குவியும் பேபர்களை தினப்படியாகவே வேஸ்டு பேபர் கடைகளில் போட்டுத்தான் வருகிறோம். இவர் ஊர்தோறும் தெருவுதோறும் தம் மகனுக்கு வீடுகள் வாங்கிக் கொடுத்துவைக்க, வாடகைப் பணங்களைக் கொண்டு வேசிகளை யும் விதவைகளையும் போஷிக்கும் செயல் போல் ஒன்றும் நடந்திருக்க வில்லை. மிகவும் அவ சியமற்ற வம்பு விஷயங்களை மடம் எழுதுகிறதே யென்று ந நிஷ்டீவேத் என்கிற சாஸ்த்ரத் தையும் கடந்து நிஷ்டீவனம் செய்யாதாருளரோ?

13. இவர் மடத்தில் பாசகராயிருந்தபோது வீதிகளில் யாசகராயிருப்பர். அப்போது நிகழ்ந்ததொரு நிகழ்ச்சியை உலகமறியவேணு மென்று உணர்த்துகிறோம். ஆலயப் பிரவே சக் கிளர்ச்சி ஏற்பட்ட போது தான் அதற்காகப் பாடுபடுவதாகச் சொல்லி நம்மை அதற்குத் துணைபுரிய வேண்டிற்று. இசைந்திருந்தோம். அந்த வியாஜத்தினுல் அடிக்கடி நெருங்கத் தொடங்கி, தனக்கு நேர்ந்துள்ள கடன் கட்டுகளை யெல்லாம் முறையிட்டுக் கொண்டு "ஓமாஹ்பாது ஓஷு ஹ்ஜஸ்ஜ் " என்கிற பட்டர் ஸ்ரீஸூக்திப்படி ஈ காட்டும். ஸமயங்களில் பெற்றுப் போகும். அதிலிருந்து ஒரு பேராசை தோன்றிக் கடன் கேட்கத் தொடங்கிற்று. நாம் கடன் வாங்குவது கொடுப்பதான விரண்டையும் சபத பூர்வமாக விட்டிருப்பது தெரிந் தும் தொந்தரவு செய்துகொண்டிருந்தது. நாடோறும் வருவது, தொழுவது, தொழுதெழு வது, அபிவாதனம் செய்வது... இத்யாதி வேஷங்களை அளவுகடந்து போட ஆரம்பித்து- விட்டது. 'இனும் பெறுவதோடு நில்லும், கடன் கேட்பதை விட்டிடும்' என்று வெட்டெ னச் சொல்லியாயிற்று. அப்போது (அழகு செய்யூர்) அழிசூர். சிமாச்சார் என்கிற வைதிகர் நம்மிடத்தில் கார்யதர்சியா யிருந்தார். அவரே கொடுக்கவொட்டாமல் செய்து விட்டா ரென்று கொண்டு அவரை துர்ப்பாஷையாகப் பேசிற்று. அவர் லேசாக விடுபவரல்ல ராதலால் முதுகிலும் தவடையிலும் ஒரு படி அப்பம் ஸமர்ப்பித்து ஜாக்ரதை! என்று சொல்ல, வந்த கதி ந ஜ்ஞாயதெயாயிற்று. இத்தகைய வைபவ விசேஷங் கள் செல்வமணி ஜோதியால் வெளிவரும்.

14. இனி அடுத்த விஷயத்திற் செல்வோம்.

"யாராவது வபையாக எழுதி பதில் கேட்டால் ரங்கநாயகியம்மாள் போன்றவர்களிடம் சென்று மிரட்டி அதட்டி இதுமாதிரி விஷயங்களை நீ ஏன் அச்சிட்டாய்? இது மிகவும் அப சாரமாயிற்றே, என்றெல்லாம் மிரட்டியும் லெட்டர் எழுதி வாங்கிப் பிரசுரிப்பதும் ... ... ..."

இத்யாதிகளை யெழுதுகிறது மடம். வெட்கம் சிக்கமுள்ளவர்கள் எழுதுவதா இது. "வபை யாக எழுதி பதில் கேட்டால்" என்றெழுதுகிறதே, என்ன அர்த்தமிதற்கு. இது கொண்ட அர்த்தத்தை யறிவோம்: இருக்கட்டும். அப்படியெழுதி நம்மை பதில் கேட்ட பண்டிதர் யார்? என்ன விஷயம் கேட்டார்? எதற்கு நாம் பதில் சொல்லவில்லை? உலகமறிய நாம் சபதம் செய்கிறோம் கேண்மின். இவர்களுடைய அகவிருள் திரளை நாம் ஸஹஸ்ரமுகமாக வெளியிட்டிருக்கிறோம். வெளியிட்டு வருகிறோம். அவற்றுள் ஏதேனும் ஒரு விஷயத்தை யாவது எடுத்து.

"இதற்கு நாம் கூறும் பதில் இது; இதற்கு மேல் நீர் என்ன பதில் கூறுகிறீர்? (அல்லது) இன்ன விஷயத்தை நான் எழுதினேன்; இதற்கு நீர் ஒரு பதிலும் எழுத வில்லை"

என்று வெளியிடட்டும். அப்போதன்றோ வபையாக எழுதி பதில் கேட்ட பெருமை உல குக்கு விளங்கும். சின்னி வீராதாதம் வாக்யார்த்தம் மறவாதபடி காக்கும் மடம் தவிர வேறு யார் இப்படி யெழுத முடியும். ரங்கநாயகியம்மாள் ப்ரஸ்தாவம் இங்கு எதற்காகவோ?

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



ஆர் அந்த ரங்கநாயகியம்மாள்? என்பதை உலகம் தெரிந்து கொள்ளாமலிராது. 15-2-60ல் திருவள்ளூரிலிருந்து மாலோல பிரஸ் மானேஜர் P. K. ராமபத்ராசாரி யென்பவர் ஞானச் சுடர் விளக்கு என்னும் அஜ்ஞானாந்தகாரச் சுவடியை அச்சிட விநோதன் அச்சகத்திற்கு அனுப்புவதும், யயாஜாத தாதமொன்றின் பெயரை வைப்பதும், 30—11—59 தேதியிலேயே புத்தகம் வெளி வந்துவிட்டதாகக் காட்டுவதும்... இத்தகைய கீழ்த்தரமான சூதுகள் செய்து, இவ்வளவாலும் ஒரு லாபமும் பெறமுடியாமல் எழுதின விஷயங்களெல்லாம் பங்கப் பட்டொழிந்ததும் முக்கூர் வயிற்றில் எவ்வளவு வேலை செய்கிறது பாருங்கள். மிரட்டலோ உருட்டலோ இது கற்றதே யொழிய நாமொன்றும் கற்றிலோம்.

15. இனி அடுத்த விஷயத்திற் செல்வோம்; மடம் எழுதுகிறது,

"ந்ருஸிம்ஹப்ரியா பத்ரிகை 20 வருட காலமாக மாதம் தவறாமல் நடக்கிறது; அரிய பெரிய பல விஷயங்களைத் தாங்குகிறது: அவரவர்கள் சந்தா செலுத்த போட்டிமேல் போட்டியாக வந்து விழுகிறார்கள்" இத்யாதி;

இதற்குக் கேண்மின்; நாம் நடத்தி வரும் பத்ரிகைகளையும் அவற்றின் பரிசுகளையும் நாற்றிசையு மறியும். இருபத்திரண்டு வருஷங்களுக்கு மேலாக அம்ருதலஹரீ பத்ரிகையை மாதம் தவறாமல் நடத்தி வருகிறோம். ஸ்ரீ ராமாநுஜனை 13 வருஷகாலமாக மாதந்தவறாமல் நடத்தி வருகிறோம். எடுத்துக் கொண்ட விஷயம் பெரிதாயிருந்தால அதை (தொடரும்) என்று விட்டு ரஸபங்கமாக்காமைக்காக இரண்டு ஸஞ்சிகைகளைச் சேர்த்து வெளியிடுதல் காதாசித்கம். தெலுங்கு பாஷையிலும் 'ஸ்ரீராமாநுஜ பத்ரிக' என்னும் பெயரால் மாதாந்த பத்ரிகை வெளியிட்டு வருகிறோம் இருபத்தைந்து வருஷகாலமாக. ஸ்வாசார்ய நியமனத்தினால் ஸம்ஸ்க்ருத பாஷையில் பலவாண்டுகள் மஞ்ஜுபாஷிணீ பத்ரிகை வெளியிட்டு வந்தோம். அதன் பிறகு வைதிக மநோஹரா மாதந்தோறும் நடைபெற்று வருகிறது. ஹிந்தி பத்ரிகையும் இதில் சேர்ந்துள்ளது. ஆக இவற்றிலெல்லாம் வெளிவரும் வியாஸங்கள் முழுவதும் நம்முடைய ஸொந்தமானவை. இவற்றில் இதுவரை வெளி வந்துள்ள வியாஸங்கள் ஐயாயிரத்திற்கு மேல் தேறும். ஒவ்வொரு வியாஸத்தையும் அந்தந்த பாஷையில் ரஸிகர்களும் வித்வான்களுமானவர்கள் உச்சிமேல் வைத்து மெச்சுகின்றார்கள். இப்படி பத்ரிகா மூலம் வெளிவரும் வியாஸங்கள் ஏகதேசம். மேற்குறித்த நான்கு பாஷைகளிலும் எத்தனை ஸ்வதந்த்ர க்ரந்தங்கள்! எத்தனை வியாக்கியான நூல்கள்!! எத்தனை स्रग्धरादुग्धराशिகள் தெரியுமோ? எண்ணிப் பார்க்கட்டுமே. ஆடு நனைகிறதே யென்று ஓநாய் அழுத கதையும், குழந்தை பால் புரைக்கேறி இறந்துபோன கதையும் தவிர வேறொன்று எழுதவறியாத முக்கூர் வயிறெரிந்து சாகவேண்டியது தவிர வேறென்ன வுள்ளது! ஒருமாதங்கூட தவறாமல் ப்ரியாவை வெளியிட்டு வருவதாகப் பெருமை யடித்துக் கொள்ளுகிறது. வாயில் ஓரக்ஷரமும் நுழையப் பெறாத வித்யார்த்திகளுக்கு ஒருநாள்கூட லேட்டும் ஆப்ஸண்டுமில்லாமல் ஆஜரானதாக வைத்துப் பள்ளிகளில் பரிசளிப்பதுண்டு. அத்தகைய பரிசை ப்ரியா தாராளமாகப் பெறலாமே. இந்த ப்ரஸங்கத்தில் ப்ரியாவின் உண்மையான பெருமையையும் நாம் தெரிவிக்கக் கடமைப் பட்டிருக்கிறோம்; அதையும் கேண்மின்.

## ந்ருஸிம்ஹப்ரியாவின் உண்மையான பெருமைகள்.

16. ந்ருஸிம்ஹப்ரியாவுக்கு மஹர்ஷி வாஸுதேவாசார்ய ஸ்வாமி ஸம்பாதகராக இருந்த வரையில் மிக்க மஹிமைதானிருந்தது. அந்த ஸ்வாமியைப் போன்ற விசால ஹ்ருதயமும் ப்ராமாணிகரும் * ந பூதோ ந பவிஷ்யதி. அந்த ஸ்வாமி ஸயூத்த்ய ஸங்கேதங்களுக்கும் கட்டுப் படாமல் நம்முடைய நூல்களில் காட்டின ஆதராதிஶயங்களை நெடுங்காலம் வேதாந்த தீபிகையில் உலகம் கண்டது இருக்கட்டும். ந்ருஸிம்ஹப்ரியாவிலேயே காட்டினவற்றில் ஒன்றே காட்டுவோமிங்கு.

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



17. பரப்ரஹ்மத்தின் வ்யாப்தி விஷயமாக இருபது வருடங்களுக்கு முன் ஒரு சர்ச்சை ற்பட்டது. ஸ்ரீமத் கோழியாலம் ஸ்வாமி பூர்ணத்வ விசார மென்றொரு சிறுநூலொழுதி வெளி ட்டு, உடனே ப்ரஹ்மவ்யாப்தி வைசிஷ்ட்யா என்னும் நமது நூலைக் கடாக்ஷித்துத் தளிந்து விச்ராந்தரானார். பிறகு D. T. தாதாசாரியர் ஸர்வசக்தி யென்றொரு சிறு வடி யெழுதினார் அதற்கு மறுப்பாக அத்புத சக்தி யென்னும் நூலை அடுத்த வாரத்தி லயே நாமெழுதி வெளியிட்டோம். இவ்விரண்டும் ந்ருஸிம்ஹப்ரியா பத்ராதிபரிடம் சென் ன. அந்த மஹர்ஷி ஸ்வாமி மிகவும் பிராமாணிகராய் ஆராய்ந்து டி. டி. தாசாசார்யரு டைய புத்தகத்தை ஒரு பதார்த்தமாகவும் நினையாமல் தள்ளிவிட்டு நமது அத்புத சக்தி நூலையே கொண்டாடி யிருக்கிறார் ஸர்வஜித்வூ மாசிமீ ப்ரியாவில்—

அந்த வியாஸம் வருமாறு:—

"அத்புதசக்தி:— இதனை இயற்றியவர் ப்ரதிவாதிபயங்கரம் வித்வான் ஸ்ரீ. உப. அண்ணங் கராசார்ய ஸ்வாமி. விஷயம்:— எம்பெருமான் எங்கும் நிறைந்துள்ள பரம்ஜோதிஸ் என்று வேதங்கள் கூறுகின்றன. அதாவது மஹத்தான பதார்த்தங்களின் வெளியிலும் அணுவான பதார்த்தங்களினுள்ளும் அவன் நிறைந்துளன் என்று சொல்லப்பட்டதாயிற்று. இது எப்படி ஸாத்யம்? அணுவான பதார்த்தங்களுக்கு உட்புறம் என்று வகுத்துக் காட்டக் கூடிய இடம் இல்லையே. அங்கு அந்தர் வியாப்தி எப்படி? அம்மாதிரியே மஹத்தான பதார்த்தங்களில் பஹிர்வ்யாப்தி என்று சொல்வது ஸாத்யமில்லை யன்றோ? ஆகையால் வேதாந்திகளின் கொள் கையை ஒப்புக்கொள்ள இயலாது. இவ்வாறு ஆக்ஷேபமொன்று உண்டு. நிற்க: பகவா னுடைய ஸ்வரூபம் முழுவதும் ஒரு பதார்த்தத்தில் வ்யாபித்திருக்கிறதென்று சொல்லிவிட்டால் மற்றும் உலகிலுள்ள வஸ்துக்களிலும் இது இருக்கிறதென்று எப்படிச் சொல்லக் கூடும்? இது மற்றுமொரு ஆக்ஷேபம். இம்மாதிரியான ஆக்ஷேபங்களுக்கு 'எம்பெருமானுக்கு அத்புதமான சக்தி உண்டாகையால் இவை பரஸ்பர விருத்தமாக இருந்தாலும், அவன் விஷயத்தில் அது இயலும்' என்று ஸமாதானத்தை சாஸ்த்ரங்களே கூறுகின்றன. இந்த அத்புதமான சக்தி என்பதன் பொருள் என்னவென்னும் விஷயத்தில் வைஷ்ணவர்களுள் விவாதமுண்டு. அப்படி விவாதிக்கும் இரு கக்ஷிக்காரர்களுள் எவர்களுடைய கக்ஷி இருகக்ஷிக்காரர்களுக்கும் பொது வாக இருக்கின்ற ஆசார்யர்களுக்கு அபிமதம் என்பதை இந்நூல் விசாரிக்கின்றது. இதை மிக்க ரஸத்துடன் ஸ்ரீ அண்ணங்கராசார்ய ஸ்வாமி விசாரித்திருக்கிறார். ரஸிகர்கள் இதைப் படித்து ஆநந்தப்படக் கூடும். இதன் விலை அணா எட்டு. இதனை 'ஸ்ரீ அண்ணங்கராசார்ய ஸ்வாமி, சின்ன காஞ்சீபுரம்' என்னும் விலாஸத்துக்கு எழுதிப் பெற்றுக்கொள்ளலாம். —ஸ்ரீ. ந்ரு. ப்ரியா. ஸம்பாதகர்,"

ன்று வெளிவந்துள்ளது.

18. இந்த மதிப்புரையில் "இம்மாதிரியான ஆக்ஷேபங்களுக்கு எம்பெருமானுக்கு அத்புத ான சக்தியுண்டாகையால் இவை பரஸ்பர விருத்தமாக இருந்தாலும் அவன் விஷயத்தில் து இயலுமென்று ஸமாதானத்தை சாஸ்த்ரங்களே கூறுகின்றன" என்றுள்ள வாக்கியமா து மிகவும் ஸாரமானது. நம்முடைய அபிப்ராயமே தமது திருவுள்ளமாகவும் இங்குப் றருடைய வாதங்கள் வம்பேயாகவும் ஸ்பஷ்டமாக வெளியிடப் பட்டதன்றோ. இவற்றால் து வாதக்ரந்தங்களெல்லாம் மத்யஸ்தர்கள் மெச்சும்படியான வகையிலே அமைந்திருக் ்றன வென்பது அறியலாகும். இந்த மதிப்புரையும் இதுபோன்ற பல மதிப்புரைகளும் ம் விரும்பி வெளிவந்தவையல்ல. ப்ராமாணிகப் பொருளை மறுத்தும் மறைத்தும் அப்ரா ணிகப் பொருள்களைச் சிலர் பரவவிடுகிறார்களே யென்கிற நிர்வேதம் தாங்கமுடியாமல் வரவர் தாமாகவே கனிந்த நெஞ்சினராய் வெளியிடுகிறார்களென்பது சொல்தொடையில் ானே எளிதிற் புலனாகும். இத்தகைய மதிப்புரைகள் பண்டிதர்களுக்கு மிக நன்றாய்த்

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



தெரிந்திருப்பவை. ஒருவரும் மறக்க முடியாது. ஆனாலும் அவற்றையறியாமலிருக்கின்றவர்களுக்கும் அவற்றை விசதப்படுத்தவேண்டியே இப்போது மடம் அஸங்கதமான நிந்தைகளில் இறங்கியிருக்கிறது. இது கிடக்க.

19. நமது பத்ரிகைகளை ஓயாது வாசிக்கின்ற நாற்றிசையிலுள்ளாரும் தம்தம் ஸந்தோஷ பரீவாஹமாக எழுதியனுப்பிக் கொண்டிருக்கும் மதிப்புரைகளை யெல்லாம் வெளியிடுவதானால் அதுவே ஒரு பெரிய பாரதமாகும். எண்ணிறந்தவை வெளியிட்டு மிருக்கிறோம். சென்ற விதழில் கும்பகோணம் வித்வத் ஸார்வபௌமரான ஸ்ரீ பூவராஹாசாருடைய அரிய பெரிய மதிப்புரையை வெளியிட்டோம். அப்படிப்பட்ட மஹா மேதாவிகளின் அருகிலும் செல்லமுடியாததன்றோ ப்ரியா. இப்போதும் இரண்டு மதிப்புரைகளை வெளியிட்டு முடிக்கிறோம்: அவற்றைக் காணீர்;—

4—6—61..ல் ஸ்ரீ. உ. வே. ராகவையங்கார் ஸ்வாமி

அம்ருதலஹரி ஸ்ரீராமாநுசன் காலே காலே கிடைத்து ஸேவித்து மகிழ்ச்சி யடைகிறேன். சில பாராக்களைத் திருப்பித் திருப்பி ஸேவித்து சிரிப்பு அடக்கமுடியாமல் இருக்கிறது. நவீனர்கள் ந்ருஸிம்ஹப்ரியாவில் பேர் ஊர் இல்லாமல் வம்பு வசைமொழிகள் எழுதுவது நூதனம் அன்றே. அந்த காரணத்தாலேயே சில வருஷங்களுக்கு முன் இதைப் பார்ப்பதில்லை யென்று தேவரீர் விட்டுத் தொலைத்த பத்ரிகையை பகவான் தன் ஸங்கல்பத்துக்கு அநுகுணமாக தேவரீரிடம் யார் மூலமாவது காட்டிக் கொடுக்கிறான், விஷப் பூச்சிகளை அப்போதைக்கப்போது நசுக்குவது லோகோபகாரமாகும் என்று பகவத் ஸங்கல்பம் போலும். இவர்களுடைய அப்ராமாணிகமான கந்தல்களை நிரஸநம் செய்வதற்கு தேவரீரைத் தவிர யாரால் முடியும்?

இவர்களை வளைத்து வளைத்துக் கேள்விகள் கேட்டால் அதுகளுக்கு வாய்திறக்க வழியுண்டோ? திக்கு நோக்கி அஞ்ஜலி செய்து வாளாவிருப்பதைத் தவிர வேறு என்ன இருக்கிறது. ஆனால் சில வருஷங்களுக்குப் பிறகு ஏதாவது ஒரு மூலையிலிருந்து ஒரு அநாமதேயன் மறுபடியும் இதையே எழுதுவன். இவர்களுக்கு ஒரு வியவஸ்தையுமில்லாமல் போயிற்று. இதுவும் லோகோபகாரார்த்தமான பகவத் ஸங்கல்பமென்று அத்யந்த பாரதந்திரியத்தோடு நடந்து கொள்ள ப்ராப்தம். — S. RAGHAVAIENGAR.

இந்த ராகவையங்கார் ஸ்வாமியே 6—6—61ல் மறுபடியும் ஒரு ஸ்ரீமுகம் ஸாதித்திருக்கிறார். (அது வருமாறு—)

"ஸ்ரீராமாநுஜன் 149ல் பழைய ந்ருஸிம்ஹப்ரியா வியாஸமொன்றைக் கண்டிப்பதான *இயேஷபதப்ரயோஜந விமர்சம்* என்னும் வியாஸத்தில் [illegible] என்கிற தேவரீருடைய ஸம்ஸ்க்ருத வியாஸம் வைதிகமநோஹரா 65ல் வெளிவந்துள்ளதாக எழுதப் பட்டிருக்கின்றது. 65 என்றதை 64 என்று திருத்தவேணும், இதுவொரு பெரிய விஷயமல்லவாயினும் சிலர் 65 மநோஹராவைப் பார்த்துவிட்டு அதில் அந்த வியாஸம் காணமற் போக, இதை யொரு பெரிய விஷயமாகக் கொண்டு அட்டஹாஸம் செய்யக்கூடும். நிற்க. அஹோபிலமட வித்வான்களின் லேகனங்களைப் பற்றி எட்டு வருடங்களுக்கு முன்னமே அடியேன் ஒரு கடிதம் எழுதியிருந்தேன். அது ஸ்ரீராமாநுஜன் 46ல் வெளி வந்துள்ளது. அப்போது வாளாவிருந்துவிட்டு தற்போது அப்ராமாணிக—அஸங்கத ப்ரலாபங்களையே புதியது போல் கிளப்புகிறார்கள்: இது மிகவும் சோசநீயம்."

மேலே குறிப்பிட்ட ஸ்ரீமுகத்தில் ஸ்ரீ ராகவையங்கார் ஸ்வாமி அஹோபிலமட வித்வான்களைப் பற்றி ஏற்கெனவே ஒரு கடிதமெழுதி யிருந்ததாகவும், அது ஸ்ரீராமாநுஜன்

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



46ல் வெளிவந்துள்ளதாகவும் ப்ரஸ்தாவிக்கப் பட்டிருக்கின்றதன்றோ. அந்தக் கடிதமும் இங்கு அநுவதிக்கப்படுகிறது.

"ஸ்ரீமத் ஸ்வாமி ஸன்னிதியில் அடியேன் செய்யும் விண்ணப்பம். தேவரீரிடமிருந்து வரும் ஸகல ஸஞ்சிகைகளையும் ஸகல புஸ்தகங்களையும் வெகு குதூஹலத்தோடு எதிர்பார்த்திருப்பதும் பலரோடு கூடி வாசித்துக் களிப்பதுமாயிருந்து வருகிறேன். ஸமீபகாலத்தில் கிடைத்த வைதிக மநோஹராவிலுள்ள விஷயங்கள் ஒவ்வொன்றும் திவ்யாம்ருத மென்ன வேணும். ... சில மாதங்களாக அஹோபிலமட வித்வான்களின் லேகனங்களும் அவற்றுக்கு ஸ்வாமியின் கண்டனங்களும் வெளிவந்து கொண்டிருக்கின்றன. மட வித்வான்களின் லேகனங்கள் ஸ்ரீராமன் "மஹா நாராசி" என்று விடை கொடுத்தனுப்புவதற்கு முந்தி விட்டருளின பாணங்கள் போல் ஸ்வாமியின் அத்புத வியாஸங்களினால் சிதறவடிக்கப் பட்டொழிகின்றன. அவர்கள் மனஸ்பூர்த்தியாகத் தங்களுடைய பங்கத்தை யுணராதிருக்க மாட்டார்கள். ருஜு ஸ்பாவமுள்ளவர்களாக இருந்தால் "சத்ரோ: ப்ரக்க்யாத வீர்யஸ்ய ரஞ்ஜநீயஸ்ய விக்ரமை:" என்று ராவணன் கதறினபடி தங்கள் ஆப்தர்களிடமாவது ஸ்வாமியின் அத்புத லேகனங்களைப் பற்றிப் பரவசர்களாய்க் கொண்டாடி யிருக்கவேண்டும். அப்படிக்கில்லாமல் வீண் ஆக்ரஹத்தினால் ந நமேயம் என்ற ரீதியில் கிடந்து அவர்கள் இன்னமும் பல அஸங்கதங்களையே எழுதிக் கொண்டிருக்கிறார்கள்; அவையும் ஸ்வாமியின் வியாஸங்களினால் உடனுக்குடனே அறுப்புண்டு வருகின்றன. லோகராவணன் பெருமாளா லறுபட்ட தலைகளைக் கண்டு மருண்டது போல இவர்களும் அறுப்புண்ட தங்கள் லேகனங்களைப் பார்த்து மருண்டே யிருப்பர்கள்."...

முக்கியமான வொரு குறிப்பு:— இந்த ராகவையங்கார் ஸ்வாமியைப் பற்றி இங்குச் சிறிது அவசியம் தெரிவிக்க வேண்டியதாகிறது. இந்த ஸ்வாமி உயர்ந்த உத்யோக பதவியில் அமர்ந்திருந்து மாதந்தோறும் 500 ரூ. ஸர்க்கார் பென்ஷன் பெறுகிற மஹநீயர். எண்பது திருநக்ஷத்ரத்திற்கு ஸமீபத்திலுள்ளவர். உபய வேதாந்த ரஹஸ்ய க்ரந்தங்களை யெல்லாம் வரியடைவே கற்றவர். இந்த பிராயத்திலும் அபாரமான ஞாபக சக்தியுள்ளவர். தென்கலை ஸம்பிரதாயஸ்தர்களில் இந்த ஸ்வாமி யொருவருடைய மதிப்புரையைத் தான் நாம் பெருமதிப்புடன் வெளியிடுவது. வடகலையார்களில் அதமபக்ஷம் இருபத்தைந்து மஹான்களும் தென்கலையார்களில் இந்த ஸ்வாமி யொருவருமே நமக்கு ஸர்ட்டிபிகேட்டளித்தவர்கள். ஆக்ரஹிகளான தென்கலையார்களின் ஸர்ட்டிபிகேட்டையே நாம் வெளியிட்டுக் கொள்வதாக பிரகிருத நிந்தைக் கந்தை யெழுதியிருப்பது ஸர்வாத்மநா அஸங்கதம்,

B. R. PURUSHOTTAMA NAIDU,
Reader in Tamil, University of Madras, Madras—5.

32, ராஜகோபால நாயகன் St.,
Chintadripet, Madras—2.
5—6—61.

(இவர் சென்னை யூனிவர்ஸிடியில் மதிக்கப்பெற்ற தமிழ்ப் பேராசிரியர்)

ஸ்ரீமத் ஸ்வாமிகட்கு, தண்டன் சமர்ப்பித்து எழுதிக்கொள்ளும் விண்ணப்பம்.

ஸ்வாமிகள் அருள்கூர்ந்து அனுப்பிய 'இராமாநுசன்' கிடைத்தது. ஒருமுறை முற்றும் வாசித்தேன். நண்ணு அசுரர் நலிவெய்த நல்லவமரர் பொலிவெய்தத் தேனெனப் பாலெனச் சில்லமிர் தூற்றென வாக்கியங்கள் செல்கின்றன. தொண்டர்க்கு அமுதாகச் சொல்மாலைகள் அமைந்திருக்கின்றன. படிக்குந்தோறும் பேரானந்தம் பெருகுகின்றது. ஸ்வாமிகள் இன்னம் இங்கே வீற்றிருந்து லீலாவிபூதியை அலங்கரிக்க வேண்டும் என்பது அடியேன் அவா. ஸர்வேச்வரன் தலைக்கட்டுவிக்கப் பிரார்த்திக்கிறேன்.

இங்ஙனம், தாஸன்
B. R. புருஷோத்தமன்.

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.

## ந்ருஸிம்ஹப்ரியா விஸர்ஜனம்.

எட்டு வருஷங்களுக்குமுன்பு ப்ரியாவில் பல பல அவத்யங்களைக் காட்டி இவை அபரிஹார்யங்களே யென்றும் இசைவித்து, இனி நாம் இப்பத்ரிகையைக் கண்ணெடுத்துப் பார்ப்பதில்லையென்று விட்டொழித்தோம். இடையில் ஒருவருஷ காலமாக தெய்வம் செய்வித்த கூத்து ஆர்க்குமறிவரிதே. 61 ஜூன் மாதத்து ப்ரியா இன்று கிடைத்தது. இதில் முதல் வியாஸம் வைதிக ஸம்பிரதாயம் என்பது. இதை எழுதியவர் மதுரை அட்வகேட். ஸ்ரீ உ. வே. N. R. கிருஷ்ணஸ்வாமி ஐயங்கார் என்பவர். இவர் நல்ல நிபுணரே. நமக்கும் பரமாப்தரே. ஆரம்பத்திலேயே எழுதுகிறாரிவர்—"ஆத்மாவின் உஜ்ஜீவனத்திற்கு ஹேதுகரமாக இவ்வுலகவாழ்க்கை எப்படி அமையவேண்டும்?" என்று. ஹேதுகரமாக என்பதற்கு என்ன அர்த்தம். இது தமிழ்ச்சொல்லன்று. வடசொல். ஹேதும் கரோதீதி ஹேதுகரம் என்னவேணும். இதற்கு ஏதேனும் பொருளுண்டோ? 'உஜ்ஜீவநகரமாக' என்றோ 'உஜ்ஜீவநஹேதுவாக' என்றோ இருக்கலாம். ஸ்ரீராமாயணத்தில் "மமாபி தத் ப்ரீதிகரம்" என்று வருவதால் நாம் ஹேதுகரம் என்போம் என்று எழுதிவிட்டார் இப்பெரியார். ஒருவர் ஒரு பெரியவரிடத்தில் ப்ராமாதிகமாக ஏதோ அபசாரப்பட்டார்; உடனே அனுதபித்து "ஐயோ அபசாரத்திற்கு ஹேதுவாச்சுதே" என்றாராம். அப்பா! அபசாரத்திற்கு ஹேதுவே இப்பாடுபடுத்தினால் இனி அபசாரம் உண்டானால் அது எப்பாடு படுத்துமோ? என்றாராம் பெரியவர். 'அபசார மாச்சுதே' என்னவேண்டியிருக்க அபசார ஹேதுவாச்சுதே! என்றது பிசகு என்று பெரியவர் திருத்திக் கொடுக்கிறாரென்பதை அபசாரப்பட்ட வ்யக்தி அறிந்துகொள்ள முடியவில்லை. "ஸாஹஸிகேஷு வசோ ஹ்ருதவத்துணம் ப்ரஸீத ஸாதுவ ஸாதுவ ஸாதுவ" என்று போனாராம். ஆர்யபாஷா பரிசயமில்லாதவர் ஏதோ எழுதி விட்டாலும் அதைத் திருத்தி யமைக்க அறியாதவர்கள் நடத்தும் பத்திரிகை நமது கண்ணில் படவேண்டாம், படவேண்டாம், படவேண்டாம். இனி ஒருகாலும் படாது. இவர்கள் அடித்தது ஆடம்பரமாக எதையும் எழுதிப் பத்ரபூரணம் செய்க. "உங்களோடெங்களிடையில்லையே. *

## விவாதசாந்தியைப் பற்றின ஸந்தோஷ அறிக்கை

நமது பரமஸுஹ்ருந்மணியும் சிறந்த வித்வானுமான ஸ்ரீ உ. வே. உப்பிலியப்பன் ஸன்னிதி. நவநீதம் ஸ்ரீராமதேசிகாசார்யரால் பரிசோதித்து ஸமீபகாலத்தில் வெளியிடப்பட்ட ஸ்ரீமத் ரஹஸ்யத்ரய ஸாரம் [இரண்டு பாகமாகவுள்ளது] வரப்பெற்றோம். இப்பதிப்பின் நேர்மைகளைப் பற்றின ஸந்தோஷத்தை விரிவாக எழுதவேண்டும். பிறகு எழுதுவோம். பரம ஸந்தோஷமென்று மட்டும் இப்போது தெரிவிக்கிறோம். இந்த ஸ்வாமி 1944-ம் வருஷத்தில் வெளியிட்ட தேசிகப்பிரபந்த வுரையில் D. R. அட்வகேட் தேசிக சரித்திரமெழுதுகிற வியாஜமாகப் பூருவாசாரியர்களை தூஷித்திருந்தது காரணமாகவே விவாத நூல்கள் வளரத் தொடங்கினவென்பதை நாம் பலகால் தெரிவித்திருக்கிறோம். உண்மையில் இந்த அதர்க்கணச் செயல்தான் விவாத வளர்ச்சிக்குக் காரணம். இதை நன்கு தெரிந்துகொண்ட நவநீதம் ஸ்வாமி இப்போதைய ரஹஸ்யத்ரயஸாரப்பதிப்பில் "ஸ்ரீதேசிக சரித்திரம் பல்வேறு பதிப்புகளில் வெளிவந்துள்ளது. அவற்றில், நிகழ்ச்சிமுறை, நடந்த இடம், காலம் முதலியவற்றில் சிறிது வேறுபாடு காணப்படுவது உண்மையே" என்று முகப்பில் வெளியிட்டு, பாதுகாஸஹஸ்ரம் அவதரித்ததைப்பற்றி யெழுதுகையில் நவீனர்களின் கற்பனைக்கதைகளை அறவேயொழித்து நாம் பலகால் தெரிவித்திருந்த உண்மையைத்தழுவி உள்ளவாறெழுதியுள்ளார். ஸங்கேத பீதியினால் சில விஷயங்களை மட்டும் பழையபடி யெழுதியிருந்தாலும் பெரும்பாலும் பிராமாணிக வழியில் சார்ந்து நம்மை உகப்பித்திருப்பதால் இத்தகைய பத்ததி க்ரமேண வளருமென்ற நம்பிக்கையினால் விவாத சாந்தி உசிதமென்று கொண்டோம்.

---

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.

Rgd. No. 2975 ஸ்ரீராமாநுஜன்

கிடைக்குமிடங்கள்—

(1) க்ரந்தமாலா ஆபீஸ், காஞ்சீபுரம்.

(2) காராலபாடி ராதாகிருஷ்ணய்யா,
229, கோவிந்தப்ப நாயகன் தெரு, மதராஸ்—1

(3) G. ரங்கைய நாயுடு,
26, குருவப்ப செட்டி தெரு, சிந்தாத்திரிபேட்டை, மதராஸ்—2

(இவர் சென்னையில் ப்ரசாரம் செய்ய நியமிக்கப்பட்டவர்.)

If un-delivered please return to:

**P. B. ANNANGARACHARYA,**
L. KANCHEPURAM.

146 Sri. Vangeepuram,
Raghavacharya Swami,
MELAKOTE; (Mysore Distt.)



Edited and Published by P. B. Annangaracharya Swami
for Madras Satgrantha Prakasana Sabha.
Printed by T. A. P. Srinivasavaradan at Sri Venkateswara Press,
Sannidhi Street, L. Kancheepuram.

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.